KALKI 8.9.96 ரூ.3.00

# கல்கி

அம்மா அடித்த அந்தர் பல்டி!





"இப்படிப்பட்ட ஆட்களுக்கா பிரசாரம் செய்தேன்...?"

- மனோரமா ஆதங்கம்!

ஜாதி இல்லாமல் ஓர் இனம்!




# 'சிநேகமுடன் டாட்டா!

**இழுத்து மூடப்பட்டுவிட்ட சிநேகம் கம்பெனி அலுவலகத்தின் முன்னால் சிலர் கதறியழுதார்கள்... சிலர் சாபம் கொடுத்தார்கள்.. சிலர் கோபத்தோடு கிடைத்ததை எடுத்து எறிந்தார்கள்....**

'சிநேகம் குரூப் ஆஃப் கம்பெனிஸ்' இழுத்து மூடிக் கொண்டு ஓடிய செய்தி வெளியான தினத்துக்கு மறுநாள் காலை பத்து மணி.

அசோக் நகர் முதல் அவென்யூவிலுள்ள சிநேகம் அலுவலகம் உடைத்து நொறுக்கப்பட்டுக் கொண்டிருந்தது. சன்னல்கள், கதவுகளைக் கல்லால் அடித்து, உடைத்து, மக்கள் உள்ளே நுழைந்து பார்த்தபோது, கணக்கு எழுதிய நோட்டுப்புத்த

கங்கள், பல போஸ்ட் டேட்டட் செக்குகள், பைல்கள், தடிமனான கோப்புகள் எல்லாம் மேசைமேல் அழகாக அடுக்கி வைக்கப் பட்டிருக்க, இரண்டு நாளைக்கு முந்தைய தண்ணீர் நிரப்பப்பட்ட ஒரு பாட்டிலும் சமர்த்தாக மேசைமேல் இருந்தது.

நபர்கள் யாரும் இல்லை. எல்லோரும் திங்கட்கிழமையே காலி பண்ணிவிட்டார்கள். ஆத்திரத்தில் மேசை நாற்காலிகளைத் தூக்கிப் போட்டு, தாள்கள் பறக்க விடப் பட்டன. டியூப்லைட்கள், மின் விசிறிகள் சுழற்றி வீசப்பட்டன.

டெலிபோனிலிருந்து அலுமினிய தம்ளர், ஸ்டேப்லர், குண்டூசி வரை அவரவரும் கிடைத்ததை எடுத்துக் கொண்டு வெளியேற, 'SNEHAM - RIGHT PLACE FOR THE RIGHT PEOPLE' என்று எழுதப்பட்ட போர்டை நோக்கி, 'தூ' என்று துப்பினார் ஒரு முதியவர். (வேலாயுதம், வயது 69.)

"பொண்ணு கல்யாணத்துக்காகப் பதினஞ்சாயிரம் போட்டு வெச்சிருந்தேங்க. ரெண்டு வட்டி ஒழுங்கா குடுத்தான். (இருபத்திநாலு சதவீதம்.) போன வெள்ளிக் கிழமை மூணாவது தவணை போய்க் கேட்டப்ப, பதில் சரியா சொல்லலை. கோயமுத்தூர்ல ஏதோ கொடோன் எரிஞ்சிடுச்சின்னு பேசிக்கிட்டாங்க. அப்புறம் வரலாம்னுட்டு போயிட்டேன். காலைலதான் நியூஸ் பார்த்துட்டு அலறி அடிச்சிட்டு வரேன்..."

**ம**ணி பத்தே முக்காலைத் தொட்ட போதுதான் தகவல் போய், போலீஸ் வந்தது.

கூட்டத்தைக் கட்டுப்படுத்தி, கட்டட வாசலை அடைவதற்குள் உள்ளேயிருந்த அத்தனை சாமான்களும் போய்விட்டன.

தரை முழுக்கத் தாள்களும் கண்ணாடித் துண்டுகளும் கவிழ்த்துப் போடப்பட்ட மேசை - நாற்காலிகளும் அவர்களுக்கு இயல்பான ஆயாசம் தர, வெளியே வந்து நின்று கொண்டார்கள்.

புகைப்படம் எடுக்க அனுமதி கேட்ட நிருபர்களையும் பத்திரிகையாளர்களையும் "போங்க, போங்க... என்ன பெரிய சொத்து மிச்சம் வெச்சிருக்கான்? போய் எடுத்துக்கங்க" என்று 'அன்பாக' உள்ளே அனுப்பினார்கள்.

பதினைந்து நாட்களுக்கு முன்புதான், தமது லாரியை விற்று ரூபாய் மூன்று லட்சத்தை டெபாசிட் செய்திருந்த ஒரு நடுத்தர வயதுக்காரர் கதறிக் கொண்டிருந்தார்.

"...... நல்லாருப்பானா? செரிக்குமா அந்தத் துட்டு? உடம்பு அழுகி சாவப்போறான் பாரு!"

கண்ணீரும் கதறலுமாக இருந்த அவரைத் தேற்றி, கமிஷனர் ஆபீஸுக்குப் போய் புகார் தரச் சொன்னார் ஒரு போலீஸ்காரர்.

"புகார் பண்ணா கிடைச்சிருமா சார்?"

மிகக் கொஞ்சம் நப்பாசையுடன் கேட்ட சில பெண்கள்.

"இப்பக் கேளுங்க. ரிஸர்வ் பேங்க்காரன் படிச்சிப் படிச்சி சொன்னானில்லை? பதினஞ்சு பர்சென்ட்டுக்கு மேல எவன் குடுத்தாலும் நம்பாதேன்னு?"

கூட்டத்திலிருந்து குரல்கள் வேகமாக வெளிப்பட, சட்டென்று ஒரு கார் வந்து நின்று கதவு திறக்க, நாலைந்து தி.மு.க. கரை வேட்டிகள். (ஒருவர் இருபதாயிரம், இரண்டு பேர் எழுபத்தைந்து, ஒருவர் இரண்டரை லட்சம்!)

"அம்பதாயிரத்துக்குள்ளாறன்னா இங்க ஆர்-6 குமரன் நகர் ஸ்டேஷன்ல கம்ப்ளெயின்ட் குடுங்க. அதுக்கு மேலன்னா நேரா டி.ஸி. ஆபீஸ் போயிருங்க என்று தேய்ந்த ரெக்கார்டு போலப் போலீஸ்காரர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

ஐந்து லட்சம் முதலீடு செய்திருந்த ஒரு வழக்கறிஞர், செய்தி கேள்விப்பட்டு மயங்கி விழுந்து மருத்துவமனைக்குக் கொண்டு போகப்பட்டிருப்பதாகப் பேசிக் கொண்டார்கள்.

"மனுசனாய்யா அவன்? போன வருஷம் அசோக் நகர் ஹை-ஸ்கூல் ஃபங்ஷன்ல பேச வந்திருந்தான். ஏழைப் பசங்களுக்கு இலவச யூனிஃபார்ம் தரேன், படிப்பு செலவு ஏத்துக்கறேன் அது இதுன்னு கொட்டினான். நாயி..."

முன்னதாகக் கல்வீச்சுக்குத் தப்பிய ஒரு கண்ணாடி சன்னலை, ஒரு கல்லால் குறி பார்த்து எறிந்துவிட்டு உரக்கக் கத்தினார் ஓர் ஆட்டோ டிரைவர். (செல்வதுரை - வயது 30. ஒன்றரை லட்சம் முதலீடு செய்திருந்தவர்.)

கூட்டத்தின் புலம்பலில், அவரவர் கேள்விப்பட்ட பிற நிதி நிறுவன மோசடிகள், மிரட்டல்கள் பற்றிய செய்திகள் வண்டி வண்டியாக வந்து கொண்டே இருந்தன. போட்ட பணத்தைத் திருப்பிக் கேட்டால், 'பணம் வேண்டுமா? உயிர் வேண்டுமா?' என்று விசாரிக்க ஆட்களை அனுப்புகிறதாம் ஒரு நாலு சக்கர நிறுவனம்!

"ரிஸர்வ் பேங்க்ல சொல்றாங்க, இன்னொருத்தன் சொல்றான்... எல்லாருக்கும் தெரிந்துதான் சார்... ஆசை யாரை விட்டுது? மொத்தமா அள்ளிக்கினு பூட்டான்... ப்ச்!"

- வருத்தத்தோடு, வந்தவர்களைத் தேற்றி அனுப்பிக் கொண்டிருந்த போலீஸ்காரர் அ. பிரகாசம் என்பவரைத் தனியே கூப்பிட்டுப் பேசியபோது சொன்னார் :

"இருவதாயிரம் போட்டிருந்தேன்; போயிடுச்சி!"

— ஔரங்கசீப்

வண்ணப்படங்கள் : சாய்வர்ஷா



# இன்னுமா
# வாடகை வீடு

## காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்

ரூ.1,800/- முதல் ரூ.8,000/- வரை மாதத் தவணைகளாக செலுத்தி குலுக்கல் மூலம் 300 முதல் 1,000 சதுர அடிகள் வரையிலுள்ள வீட்டினை தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித்தொகையை வாடகை போல் வீட்டில் இருந்து கொண்டே செலுத்தலாம்.

## சுலபத் தவணை சுபமங்களா திட்டம்

இத்திட்டத்தின் கீழ் தங்களுக்கு பிடித்தமான வீட்டினை தேர்ந்தெடுத்து ரூ.10,000/- மட்டுமே அட்வான்சாக செலுத்தி, உடனடியாக உங்கள் பெயரை பதிவு செய்து கொள்ளலாம். பின்பு ஒரு மாத காலத்திற்குள் வீட்டின் மொத்த தொகையில் 25% மட்டுமே செலுத்த வேண்டும். மீதமுள்ள 75% தொகைக்கு கடன் வழங்கும் நிறுவனமான எல்.ஐ.சி. கேஸ்பின், மூலமாக தங்களுக்கு கடன் உதவி ஏற்பாடும் செய்து தருகிறோம்.

**வீடு கிடைக்கும் இடங்கள் :**

சென்னையில் : கே.கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, போரூர், அம்பத்தூர், வெங்கடாபுரம், பல்லாவரம், மடிப்பாக்கம். திருச்சியில் : ஸ்ரீரங்கம், திருவெறும்பூர், கே.கே. நகர், கிராப்போடு, டி.வி.எஸ். டோல்கேட், மண்ணச்சநல்லூர் மற்றும் பிரதான இடங்களில். மதுரையில் : எல்லீஸ் நகர், அண்ணா நகர், எஸ்.எஸ் காலனி, டி.வி.எஸ். நகர், அழகப்பா நகர், வேல்முருகன் நகர் மற்றும் பிரதான இடங்களில். கோவையில் : போரூர், மருதமலை, பீளமேடு, வடவள்ளி, துடியலூர், சரவணம்பட்டி, தெலுங்குபாளையம்... கணபதி மற்றும் பல இடங்களில். பெங்களூரில் : விஜய நகர், [illegible] மற்றும் பிரதான இடங்களில்.

| ஒரு சதுர அடியின் விலை: | |
|---|---|
| சென்னை | ரூ.**650/-** |
| திருச்சி, மதுரை | ரூ.**550/-** |
| கோவை | ரூ.**700/-** |
| பெங்களூர் | ரூ.**1,000/-** |

எங்களிடம் வைப்பு நிதிக்கு

# 18% முதல் 27% வரை

வட்டியும்

## + 1 கிராம் தங்க நாணயம்
## + சிறப்பு ஊக்கத் தொகையும்

வழங்கப்படும்

(குறைந்த பட்ச வைப்புத் தொகை ரூ.10,000/- அதற்கு மேல் ரூ.1,000/-மடங்குகளில்)




## காசி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்
## காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட்.

தலைமை அலுவலகம் : 91-92, [illegible] அசோக் நகர், சென்னை - 600 083. ✆ 4822208, 4825586, 4821969, 4890409, 4890373, பேக்ஸ் : 0444825606. கிளைகள் : [illegible] 13, [illegible] சென்னை - 15. ✆ 456484 [illegible] : 140, [illegible] 19 [illegible] சென்னை - 600 004. திருவான்மியூர் : [illegible] 10 [illegible] 64 [illegible] திருவான்மியூர், சென்னை - 600 041. அம்பத்தூர் : [illegible] 11, [illegible] அம்பத்தூர், சென்னை - 600 053. ✆ 682592 மடிப்பாக்கம் : [illegible] மடிப்பாக்கம் - 600 091 திருத்தணி [illegible] ✆ 88304 (04188) திருச்சி : 5/8, 25, [illegible] திருச்சி - 620 001 ✆ 466003, 32917, [illegible] திருச்சி-1, ✆ 466002. மதுரை : 248A, [illegible] மதுரை - 625 001. ✆ 541190 கோவை : [illegible] 5968, [illegible] கோயம்புத்தூர் - 641 002. ✆ 444856 [illegible] 2098, [illegible] கோவை 641 012. பெங்களூர் : 33, [illegible] 400 [illegible] - 3. ✆ 3338351, 1532, [illegible] பெங்களூர் - 560 041 ✆ 6652480 [illegible] : 20 [illegible] 570 001. ✆ 35997 [illegible] : 4-8-14 [illegible] 522 007. ✆ 355257, [illegible] 203A, [illegible] 22 ✆ 4082649. DUBAI: NADA AL ZUHOOR TRADING EST, P.BOX NO.27857 DUBAI:UAE. TEL 247970 INTERCODE 00971/40 FAX:247980

ஞாயிறு அலுவலகம் உண்டு

**களத்தில் கல்கி!**

# ஆவின்

*ஆவின் பாலை பாக்கெட்டுகளாக வாங்குபவர்களுக்குப் பிரச்னையில்லை. ஆனால் தானியங்கி பால் வழங்கும் நிலையங்களிலும் மற்ற ஆவின் பால் விற்பனையாளர்களிடமும் அளந்து வாங்குபவர்களாயிருந்தால் உஷாராக இருங்கள். அளவு குறைகிறது! பால்வளத்துறை அமைச்சருடன் ஓர் அதிகாலையில் செய்த அதிரடி விசிட்டின் அனுபவத்தைத்தான் சொல்கிறோம்....*



• அமைச்சர் க. சுந்தரம்

அதிகாலை 3.00 மணி. பால்வளத் துறை அமைச்சர் க. சுந்தரம் வீட்டில் நாம். கூடவே ஆவின் பொது மேலாளர் சி.எம். உத்தம் தேவ் ஐ.ஏ.எஸ்., டி. குமார் (மேலாளர், மொத்த விற்பனை), கே. ஆர். சுப்ரமணியம் (துணை மேலாளர், மொத்த விற்பனை), டாக்டர் என். சங்கர் (மேலாளர், தரக்கட்டுப்பாடு), எஸ். ஆர். சங்கர் (துணை மேலாளர், தரக்கட்டுப்பாடு) மற்றும் அமைச்சரின் உதவியாளர்கள் ராஜேந்திரன், கருணாநிதி ஆகியோர்.

புறப்பட்டோம்.

மாம்பலம் – முத்துரங்கம் சாலையிலுள்ள தானியங்கி பால் வழங்கும் நிலையத்தை அடைந்தபோது 3.15 மணி. பால் முன்பே வந்து நிரப்பப்பட்டு விட்டது. ஆயினும் வாடிக்கையாளர்கள் யாருமே வராததால் இன்னமும் பால் வழங்க ஆரம்பிக்கப்படவில்லை.

தூங்கிக் கொண்டிருந்த ஊழியர்களை





• பாலின் அளவு சரிபார்க்கப்படுகிறது



• பக்கத்து டீக்கடையிலிருந்து டீ குடிக்கிறார் அமைச்சர்

எழுப்பினோம். தரக்கட்டுப்பாட்டு அதிகாரிகள் பாலின் தரத்தைப் பரிசோதித்தார்கள். தண்ணீர் கலப்படம் ஏதும் இல்லை. சரியாக இருந்தது. புறப்பட்டோம்.

தெற்கு போக் சாலையிலுள்ள பால் வழங்கும் நிலையம். அங்கு அப்போதுதான் வாடிக்கையாளர்கள் வர ஆரம்பித்திருந்தார்கள். பாலின் தரம் அங்கும் சரியாகவே இருந்தது.

''பாலெல்லாம் தண்ணீர் கலப்படமில்லாமல் கிடைக்கிறதா?'' வந்து கொண்டிருந்த

# ாலை அளந்து வாங்குகிறீர்களா?
# அளவு குறைகிறது, உஷார்!

வாடிக்கையாளர்களிடம் விசாரித்தார் அமைச்சர்.

''பால் சுத்தமாகத்தான் கிடைக்கிறது. ஆனால் மாலையில் எப்போது பால் லாரி வந்து பால் வழங்கும் என்பது குறிப்பிட்டுச் சொல்ல முடியாததாகவே இருக்கிறது. சில நாட்களில் ரொம்பவும் நேரமாகி விடுகிறது என்பதால் நாங்கள் நீண்ட நேரம் காத்துக் கிடக்க வேண்டியிருக்கிறது!'' என்று புகார் சொன்னார்கள் வாடிக்கையாளர்கள்.

''கவனிக்கிறேன்!'' என்று சொன்னார் அமைச்சர்.

அடுத்து பாண்டிபஜார் காவல் நிலையத்துக்கு அருகிலுள்ள பால் வழங்கும் நிலையத்துக்குச் சென்றோம். அப்போதுதான் லாரியிலிருந்து பூத்துக்கு பால் வழங்கப்பட்டுக் கொண்டிருந்தது.

தரக்கட்டுப்பாட்டு அதிகாரிகள் லாரியிலிருக்கும் பாலை எடுத்துப் பரிசோதித்துப் பார்த்தார்கள். தரம் சரியாகவே இருந்தது.

புறப்படுகிற சமயத்தில், ஒருவர் சைக்கிளில்

• நுங்கம்பாக்கத்தில்...



• பாலின் தரம் பரிசோதிக்கப்படுகிறது

பால் வழங்கிக் கொண்டிருந்தார்கள். தரம் சரியாகவே இருந்தது. அளவு?

அரை லிட்டர் பால் வாங்கிக் கொண்டு திரும்பிய ஒரு வாடிக்கையாளரிடமிருந்த பாலை வாங்கி மறுபடியும் அளந்து பார்த்ததில் 500 மி. லிட்டருக்குப் பதிலாக 480தான் இருந்தது. இரண்டரை லிட்டர் வாங்கிக் கொண்டு திரும்பிய இன்னொரு வாடிக்கையாளரிடமிருந்த பாலையும் வாங்கி அளந்து பார்த்ததில் 2500 மி. லிட்டருக்குப் பதில் 2400 மி. லிட்டர்தான் இருந்தது!

"இப்படியெல்லாம் பாலின் அளவு குறைவாக இருக்கிறதே, இது பற்றியெல்லாம்



• "இத்தனை பெரிய கேன் எதற்காக?"

ஒரு பெரிய கேனோடு வந்து இறங்கினார். அவரை விசாரிக்க ஆரம்பித்தார் அமைச்சர்

"உங்கள் பேர் என்ன?"

"செல்வராஜ்!"

"எங்கிருந்து வருகிறீர்கள்?"

"தேனாம்பேட்டையிலிருந்து..."

"எதற்கு இத்தனை பெரிய கேன்?"

"இன்றைக்குத்தான் முதன் முதலில் வருகிறேன். பால் ஏதாவது கிடைக்குமா என்று பார்ப்பதற்காக வந்தேன்."

"பால் கிடைக்குமா, கிடைக்காதா என்று தெரியாதபோது, எப்படி இத்தனை பெரிய கேனை எடுத்துக் கொண்டு வந்தீர்கள்?"

பதில் சொல்லத் தெரியாமல் விழித்தார் அந்த நபர்.

பால் வழங்கும் நிலையத்தின் ஊழியரை அழைத்த அமைச்சர், "ஜனங்களுக்குக் கொடுக்க வேண்டிய பாலையெல்லாம் இப்படித்தான் மொத்த வியாபாரிகளுக்குக் கொடுக்கிறீர்களா?"

"இல்லை சார். இரண்டு லிட்டருக்கு மேல் கொடுப்பதில்லை."

"இரண்டு லிட்டருக்கா இத்தனை பெரிய கேனோடு வருகிறார் இவர்? இப்படிப்பட்டவர்களுக்கு மொத்தமாகப் பால் விற்பனை செய்தால் நான் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கும் ஜாக்கிரதை!" – எச்சரித்தார் அமைச்சர்.

அடுத்து நுங்கம்பாக்கத்திலுள்ள (ஸ்டெர்லிங் ரோடு அருகில்) தானியங்கி பால் வழங்கும் நிலையம். வாடிக்கையாளர்களுக்குப்

உங்களுக்குத் தெரியுமா?" – வாடிக்கையாளர்களிடம் கேட்டார் அமைச்சர்.

"தெரியாது!" என்றார்கள் அவர்கள்.

"இனியாவது தெரிந்து கொள்ளுங்கள். பாலின் அளவில் உங்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டால், பால் வழங்கும் நிலையத்திலேயே உள்ள லிட்டர் அளவைகளைக் கேட்டு வாங்கி, நீங்கள் மறுபடியும் அளந்து பார்க்கலாம். இந்த விழிப்புணர்வு உங்களுக்கெல்லாம் வர வேண்டும். நீங்கள் யாருக்கும் பயப்படத் தேவையில்லை!" என்று வாடிக்கையாளர்களிடம் எடுத்துச் சொன்னார் அமைச்சர்.

அப்போது நேரம் 4.45 மணி. எதிரிலுள்ள டீக்கடையிலிருந்து அனைவருக்கும் டீ வரவழைக்கப்பட்டது.



> ''நம்ப தலைவர் வரவர குழம்பிப்போயிருக்கார்னு தெரியுது!''
> ''எப்படி தெரியும்?''
> ''உலகத்திலே எந்த கோர்ட் தன்னை கைது செய்ய உத்திர விட்டாலும் உடனே ஜாமீனில் வெளிவர சர்வதேச நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்திருக்காராம்!''
> – செய்யார் து. பூவராகவன்

''இது மாதிரி வாடிக்கையாளர்களுக்கு அளவு குறைவாகத் தருகிற தானியங்கி பால் வழங்கும் நிலைய லைசென்ஸ்தாரர் மேல் என்ன நடவடிக்கை எடுப்பீர்கள்?'' டீயை உறிஞ்சியபடியே அமைச்சரிடம் கேட்டோம்.

''பாலின் தரம் குறைவாக இருந்தால், மறுபரிசீலனைக்கே இடமில்லாமல் அவர்களின் லைசென்ஸ்களை ரத்து செய்து விடுவோம். அளவு குறைவாக இருக்கிறபோது சம்பந்தப்பட்டவர்களுக்கு அபராதம் விதிப்போம். இப்படி இரண்டு முறை அபராதம் கட்டியவர், மூன்றாவது முறையும் மாட்டிக் கொள்கிறபோதுதான் அவரது லைசென்ஸை ரத்து செய்ய முடியும். இதுதான் விதி. இந்த நபர் இப்போது இரண்டாவது முறையாக மாட்டியிருக்கிறார். முன்பு நான் வந்தபோது அரை லிட்டருக்கு 50 மில்லி குறைவாக இருந்தது. அபராதம் போட்டோம். இப்போது 50 மில்லி என்பது இருபது மில்லியாகக் குறைந்திருக்கிறது. இப்போதும் அபராதம் போடுவோம். இனி மாட்டினால் லைசென்ஸ் போய் விடும் என்பதால் சரியான அளவில் பால் வழங்குவார் என்று எதிர்பார்க்கலாம்!'' என்ற அமைச்சர், கடையின் லைசென்ஸ்தாரரை அழைத்தார்.

''ஒரு நாளைக்கு நீங்கள் எத்தனை லிட்டர் பால் வழங்குகிறீர்கள்?''

''3,500 லிட்டர்!''

''ஒரு லிட்டருக்கு 40 மில்லி குறைகிறது என்றால் 3500 லிட்டருக்கு 140000. மில்லி. ஒரு நாளைக்கு 140 லிட்டர் கிடைக்கிறது. அதாவது, வாடிக்கையாளர்களுக்குக் குறைவான அளவில் பால் வழங்குவதால் ஒரு நாளைக்கு 140 லிட்டர் பால் உங்களுக்கு அதிகப்படியான வருமானமாக இருக்கிறது. ரூபாயில் சொன்னால், ஒரு நாளைக்கு 1190 ரூபாய் அதிக வருமானம். இதோடு ஆவின் தருகிற கமிஷன். இல்லையா?'' அமைச்சர் கேட்க, அசடுவழிந்தார் அவர்.

'அடுத்தபடி நாம் எங்கே போகலாம்?'' அமைச்சர் நம்மிடம் கேட்டார்.

''இதற்கு முன்பு நீங்கள் விசிட் செய்த மூன்று முறைகளில் ஒருமுறையாவது வடசென்னைப் பகுதிகளுக்குச் சென்றிருக்கிறீர்களா?'' அமைச்சரிடம் கேட்டோம்.

''இல்லை. இப்போது போனால் போகிறது! வாருங்கள்!''

புறப்பட்டு, வடசென்னையிலுள்ள டி.எச். ரோடு அருகிலிருக்கும் பால் வழங்கு நிலையத்துக்குள் சென்றோம். வாடிக்கையாளர்கள் மொய்த்துக் கொண்டிருந்தார்கள்.

பரிசோதிக்கப்பட்டதில் தரம் சரியாகவே இருந்தது. வாடிக்கையாளர் வாங்கிச் சென்ற மூன்று லிட்டர் பாலை வாங்கி மறுபடியும் அளந்ததில் 140 மில்லி குறைவாக இருந்தது.

வாடிக்கையாளர்களிடம் அமைச்சர் விசாரித்தபோது, ''இங்கத்தவிட பக்கத்துல இருக்கிற... அதோ தெரியுதே அந்தக் கோயில் பக்கத்துல இருக்கற பூத்லதாங்க ரொம்ப மோசம்!'' என்றனர்கள்.

உடனே அவர்கள் கை காட்டிய சரவணன் தெருவிலிருக்கும் பூத்துக்குச் சென்றோம்.

நாங்கள் சென்றபோது வழங்கப்பட்ட அரை லிட்டர் பாலை வாங்கி மறுபடியும் அளந்து பார்த்ததில் பத்து மில்லிதான் குறைவாக இருந்தது. தரம் சரியாக இருந்தது.

நாங்கள் செல்வதற்கு முன்பே வழங்கப்பட்ட அரை லிட்டர் பாலை வாங்கி அளந்து பார்த்ததில் 35 மில்லி குறைவாக இருந்தது!

நாங்கள் வருவதை அறிந்ததும் அவசர அவசரமாக அட்ஜஸ்ட் செய்திருக்கிறார்கள். அப்படியும் சரியாகச் செய்ய முடியாமல் பத்து மில்லி குறைவாகவே இருந்திருக்கிறது!

அடுத்து வியாசர்பாடியிலிருக்கும் முத்து முதலி தெருவிலிருக்கும் பூத்துக்குச் சென்றோம். அங்கே ஏறத்தாழ பால் வழங்கி முடிக்கப்பட்டுவிட்ட நிலை. என்றாலும் கடைசி சில லிட்டர்கள் வழங்கப்பட்டபோது போய் விட்டோம்.

பரிசோதித்துப் பார்த்ததில் தரம் சரியாக இருந்தாலும் அளவில் அரை லிட்டருக்குப் பத்து மில்லி குறைவாகத்தான் இருந்தது. வேறு வழியில்லை; அவரும் அபராதம் கட்டித்தான் ஆக வேண்டும்!

அங்கும் பொதுமக்களிடம் விசாரித்தார் அமைச்சர். ''இங்கு எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. பக்கத்துத் தெருவில்தான்...'' என்றுதான் பலரும் சொன்னார்கள்.

''பார்த்தீர்களா, நாம் விசாரிக்கிற ஒவ்வொரு இடத்திலும் அந்தந்த இடங்களில் எல்லாம் நன்றாக இருப்பதாகவும் பக்கத்திலுள்ள பூத்தில்தான் தவறுகள் நடப்பதாகவும் பொது மக்கள் கூறுகிறார்கள். ஏன் இப்படி? தாங்கள் வழக்கமாக வாங்குகிற பூத் பற்றிப் புகார்




# நவீன விஞ்ஞான முறையில் சுத்திகரிக்கப்பட்டது

## போஷாக்கூட்டும் சமையல் எண்ணெய்



தாய்ப் பாலுக்கு சமமானது என நிரூபிக்கப்பட்ட கே.கே. ஆர் பாமாயில் தனித்தன்மை வாய்ந்தது. இதர சமையல் எண்ணெய்களிலிருந்து பல வகையில் மாறுபட்டது. பாமாயில் பாம் பழத்திலிருந்து பிழிந்தெடுக்கப்படுகிறது.

வைட்டமின் A & E இரண்டையும் மிக அதிக அளவில் கொண்டுள்ளதால் உயிரணுக்கள் சேதம் அடையாமல் பாதுகாத்து உடல் நலம் சீராக இருக்க உதவுகிறது. மாரடைப்பு, புற்றுநோய் மற்றும் நுரையீரல் சம்பந்தப்பட்ட நோய்கள் ஏற்படக்கூடிய அபாயத்தை குறைக்க வல்லது என்று நிரூபிக்கப்பட்டுள்ளது.







* கே. கே. ஆரின் செம் பனை பண்ணையில் இரண்டு யூனிட் (10 செண்ட் ஒரு யூனிட்) வாங்குபவருக்கு, ஒரு வருடத்திற்கு மாதத்தோறும் ஒரு லிட்டர் கே.கே. ஆர் பாமாயில் இலவசமாக வழங்கப்படும்.



**KKR**
பாமாயில் (இந்தியா) லிட்.,

NO. 121, மாதவரம் நெடுஞ்சாலை (வடக்கு), பெரம்பூர், சென்னை 600 011. Ph: 5375456, 5376796.

**கே. கே. ஆர் பாமாயில். சுத்தம் மற்றும் முழு குடும்பத்தின் ஆரோக்கியம்.**

ADEPT/KKR/96

கூறினால், சம்பந்தப்பட்டவர்களைத் தினமும் சந்திக்க வேண்டியிருக்குமே என்கிற பயமா அல்லது பச்சாதாபமா தெரியவில்லை. இப்படியிருந்தால் நாம் எப்படி நடவடிக்கை எடுப்பது? பொது மக்களின் இந்த மனோநிலை முதலில் மாற வேண்டும். அப்போதுதான் நாமும் நல்ல முறையில் செயல்பட முடியும்!'' என்றார் அமைச்சர் நம்மிடம்.

இதற்குள் பொழுது பொலபொலவென்று விடிந்து விட்டது. பால் வழங்குவதெல்லாம் முடிந்து விட்டிருக்கும் என்பதால் இறுதியில் அம்பத்தூரிலுள்ள பால் பண்ணைக்கு ஒரு மின்னல் வேக விசிட் செய்து விட்டு அமைச்சரின் வீட்டையடைந்தோம். டீ கொடுத்தார்கள்.

"இந்த டீ ஆவின் பாலில் போடப்பட்டதல்ல; நானே சொந்தமாகக் கறவை மாடு வைத்திருக்கிறேன். அதில் போடப்பட்டது தான் இந்த டீ!" என்றார் அமைச்சர்.

''பால்வளத்துறையின் அமைச்சரான நீங்களே அரசாங்கம் விற்பனை செய்கிற ஆவின் பாலை உபயோகிக்காவிட்டால் எப்படி?''

"அப்படியில்லை. என் வீட்டுக்கு ஆவின் பால் பாக்கெட்டுகள் வருவதைப் பொது மக்கள் பார்த்தால், 'அமைச்சரல்லவா, அதனால் பால் பாக்கெட்டெல்லாம் சும்மாவே போகும்!' என்று பேசுவதற்கு வாய்ப்பிருக்கிறது. இப்படியொரு வாய்ப்பைப் பொது மக்களுக்கு ஏற்படுத்தி விடக்கூடாது என்பதற்காகவே நான் ஊரிலிருந்த கறவை மாட்டை இங்கு கொண்டு வந்து விட்டேன்!'' என்ற அமைச்சரின் சொந்த ஊர் சென்னைக்கு அருகிலுள்ள மீஞ்சூர்.

"கடந்த ஆட்சியில் நடந்துள்ள ஊழல்கள் பற்றித்தான் இப்போது பொறுப்பேற்றுக் கொண்டுள்ள அமைச்சர்கள் முதன் முதலில் பேசுகிறார்கள். அந்த அளவுக்குக் கடந்த ஆட்சி நடந்திருக்கிறது. உங்கள் துறையில் எப்படி?''

"துல்லியமான கணக்கெடுப்புகள் இன்னும் முடிந்தபாடில்லை. இருந்தாலும் தமிழகம் முழுவதிலுள்ள பால் கூட்டுறவுச் சங்கங்களின் தலைவர்கள் தங்களிஷ்டத்திற்குப் பணத்தை எடுத்திருக்கிறார்கள். இதன் காரணமாக கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தங்களிடமுள்ள கறவை மாடுகளிலிருந்து பால் கறந்து விற்பனை செய்பவர்களுக்கு, வாரா வாரம் தரப்பட வேண்டிய பணம் பதினொரு வாரங்களாகத் தரப்படாமல் இருந்தது. நான் பொறுப்பேற்றவுடன் முதல் நடவடிக்கையாக, பதினொரு வாரங்கள் பாக்கி என்பதை மாற்றி, மூன்று வாரங்கள்தான் பாக்கி என்கிற நிலையை உருவாக்கியிருக்கிறேன். வெகு விரைவில் இந்தத் தாமதமும் சரிசெய்யப்பட்டு, இனி வாரா வாரம் வழங்கப்பட்டு விடும்."

''ஆவினில் வழங்கப்படுகிற பால் பாக்கெட்டுகளிலிருந்து பாலை ஊசி மூலம் உறிஞ்சியெடுத்துத் தண்ணீரைக் கலந்து கொடுக்கிறார்கள் என்று பொது மக்களிடையே பரவலான ஒரு கருத்து இருக்கிறது. இது பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?''

"அது சாத்தியமே இல்லை. முதல் காரணம், பாக்கெட் ஓட்டையாகி விடும். அதைப் பிறகு அவர்களால் அடைக்கவே முடியாது என்பது. இரண்டாவது காரணம், அப்படியே அடைக்க முடியும் என்றாலும் கூட பால் பண்ணையிலிருந்து லாரிகள் மூலமாக பூத்களுக்கு விநியோகமாகும் நேரம் என்பது மிகவும் குறைவு. அந்தக் குறைவான நேரத்தில் அப்படியெல்லாம் செய்யவே முடியாது என்பது. லாரிகளிலிருந்து மொத்தமாக சப்ளை செய்யும் பாலையே நாம் பரிசோதித்துப் பார்த்தோமே, அதிலேயே தண்ணீர்க் கலப்படம் இல்லையே! பொதுமக்களுக்கு வழங்கும் போது அளவுகளில்தானே ஏமாற்றுகிறார்கள்! எனவேதான் இனி முடிந்தவரை எல்லா இடங்களிலேயும் பாக்கெட் பாலையே சப்ளை செய்வது என்று முடிவெடுத்திருக்கிறோம்."

"பொது மக்கள் தங்களுக்குள்ள குறைகளைத் தெரிவிப்பதற்கு வசதியாக, ஒவ்வொரு பால் பூத்திலும் புகார்ப் புத்தகங்கள் வைக்கலாமே!"

"நல்ல யோசனை. உடனடியாக வைக்க ஏற்பாடு செய்கிறேன்."

"குடிசை மாற்று வாரியத்தின் பொறுப்பும் உங்களிடம்தானே இருக்கிறது. அதில் உங்கள் முதல்கட்ட நடவடிக்கை என்ன?''

''குடிசை மாற்று வாரியத்தின் வீடுகளை வாங்கிக் குடியேறும் சிலர் என்ன செய்கிறார்கள் என்றால், குடியேறிய பிறகு அந்த வீட்டை மற்றவருக்கு விற்று விட்டு, மறுபடியும் குடிசைப் பகுதிகளுக்கே சென்று குடியேறி விடுகிறார்கள். இதைத் தடுத்தாக வேண்டும் என்பதால் இனி குடிசை மாற்று வாரிய வீடுகளைத் தங்கள் வாரிசுகள் தவிர, வேறு யார் பெயரிலும் மாற்றம் செய்ய முடியாது என்கிற நிலையை உருவாக்கியிருக்கிறோம். இந்த நடவடிக்கையால், தற்போது மற்றவருக்கு விற்கப்படவிருந்த 8000 வீடுகளைத் தடுத்து நிறுத்தியிருக்கிறோம். முன்பு குடிசை மாற்று வாரியத்தால் கட்டிக் கொடுக்கப்பட்ட வீடுகளில் 58,900 வீடுகள் படுமோசமான நிலையில் உள்ளன. அவற்றைப் பராமரிப்பதற்காக ஐந்து கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம்!" என்றார் பால்வளத் துறை மற்றும் குடிசை மாற்று வாரியத்தின் அமைச்சர் சுசுந்தரம்.

- இளங்கோவன், ஸ்ரீநிவாசன்.

வண்ணப்படங்கள் : பேஜர் கே. மூர்த்தி

ESTD : 1955 **ஸ்ரீ :** Ph : 24823




## தீபாவளி கங்கா ஸ்நானமும் தங்க அன்னபூர்ணா தேவி தரிசனமும் கூடிய 19 நாட்கள் கொண்ட காசி நேபாள் யாத்திரை

சென்னையிலிருந்து 30.10.96 & 31.10.96-ம் தேதிகளில் புறப்பட்டு ஆக்ரா மதுரா - டில்லி - அரித்வார் - அலகாபாத் - அயோத்தியா - காசி - கயா - கல்கத்தா வழியாக சென்னை வந்து சேர்கிறது. இந்த யாத்திரைக்கு இரு தனி 3 டயர் கேரேஜ் ரிசர்வ் செய்துள்ளோம். கட்டணம் நபருக்கு ரூ. 6275/- ரூ. 2000 விதம் அட்வான்ஸ் அனுப்பி ரிசர்வ் செய்து கொள்ள வேண்டும்.

பல அன்பர்களின் வேண்டுகோளின்படி, இந்த தீபாவளி கங்கா ஸ்நான காசி யாத்திரைக்காக ஏற்பாடு செய்துள்ள 2 கேரேஜில் - ஒரு 3 டயர் கேரேஜ் சென்னையிலிருந்து புறப்பட்டு ஆக்ரா - மதுரா - டில்லி - அரித்வார் - அலகாபாத் - அயோத்தியா - காசி, நேபாள் - காட்மாண்ட் - கயா கல்கத்தா வழியாக சென்னை வந்து சேரும்படியான யாத்திரை ஸ்பெஷல்கள்

## *16 நாட்கள் கொண்ட – பஞ்ச துவாரகை யாத்திரை*

2.12.96 தேதி சென்னையிலிருந்து ஆரம்பமாகிறது. கட்டணம் ரூ. 3975 சென்னை, அகமதாபாத், கோமதி, துவாரகை, பேட்டி துவாரகை, சோமநாத், டாக்கூர், துவாரகை, நாத்துவாரகை, காங்ரோலி துவாரகை, அஜ்மீர், ஜெய்ப்பூர், புஷ்கரம், உதயபூர், மவுண்ட் அபு மற்றும் பல க்ஷேத்திரங்கள்.

இந்த யாத்திரையில் அருப்புக்கோட்டை, திரு. A. ராஜன் குடும்பத்தினர், கோவை திருமதி தங்கம் சம்பத், சென்னை திரு. R. வாசுதேவன், வைதேகி, செங்கமலம் குடும்பத்தார், குரோம்பேட்டை திரு. M.ராமன் – சரோஜா தம்பதியர், திருச்சி STATE BANK. திரு. P. ஞானசுந்தரம், ராஜு தம்பதியருடன் திருமதி ராதா ஸ்ரீனிவாசன் அவர்களும் பதிவுசெய்துள்ளார்கள்.

விவரத்திற்கு ரூ. 2 ஸ்டாம்ப் அனுப்பி, முழு விவரங்கள் பெறலாம்.

**ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்,**

34-A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.

K.E. NAMPILLAI N. SRIDHAR, N.K. SEKAR



உ

# தருமை ஆதீனம்
# பன்னிரு திருமுறைப் பதிப்பு வெளியீடு

17,000 பக்கங்கள் 16 பகுதிகள் கொண்ட செம்மைப் பதிப்பு.

பொழிப்புரை, குறிப்புரை, தலவரலாறு, கல்வெட்டு ஆராய்ச்சி உரை மற்றும் விளக்கங்கள் படங்களுடன்

அடக்க விலை ரூ.3,000/-

தருமை ஆதினம் கயிலைக் குருமணி 25வது குருமகா சன்னிதானம் அவர்களின் குருபூஜை வெள்ளி விழா நினைவாக 1997 தை மாதத்தில் வெளிவர உள்ளது.

முற்பணம் முழுத் தொகையாகவோ, 500/- கொண்ட ஆறு பகுதி களாகவோ செலுத்திப் பதிவு செய்து கொள்க.

மேலாளர்,
ஞானசம்பந்தம் பதிப்பகம்
தருமை ஆதீனம்
மயிலாடுதுறை - 609 001.

# காதல் சுகப்படி

போட்டிக் கதை - 2

சூர்யலதா

என் மனைவி யாருக்கோ எழுதிய காதல் கடிதம் அவளது இன்ட்டீரியர் டெகரேஷன் பற்றிய புத்தகத்தில் கிடைத்தது.

ஆச்சரியப்பட்டேன்.

'என் இதயத்தைக் கவர்ந்தவருக்கு....' என்று ஆரம்பிக்கப்பட்டிருந்ததே தவிர, யார் பெயரும் குறிப்பிடப்படவில்லை.

யார் அவன்? இப்போதைய காதலா, முந்தைய காதலா? அடி கள்ளி! என்னிடம் இதைப் பற்றி மூச்சு விட்டதே இல்லையே!

பொதுவாகவே எனக்கு இந்தக் காதல், கத்திரிக்காயில் எல்லாம் நம்பிக்கை கிடையாது. எல்லாம் வெறும் 'இன்ஃபாச்சுவேஷன்' - இனக் கவர்ச்சி படுத்தும் பாடுதான்.

என் சொந்த வாழ்க்கையில் காதல் என்பது, எனக்குத் தெரிந்த வரை... என் நண்பனின் தங்கை.. அவளது ஷார்ட்ஹாண்ட் புத்தகத்தில்... ஷார்ட்ஹாண்டில் அப்படி என்னதான் இருக்கிறது என்று அறிவதற்காக அவளிடம் வாங்கிப் பார்த்த அந்தப் புத்தகத்தின் நடுவில் இருந்த அந்த நாலாய் மடித்து வைத்திருந்த காகிதம்...

அந்தக் காகிதத்தில் ஷார்ட்ஹாண்டில் எழுதப்பட்டிருந்ததை மொழி பெயர்த்துப் பார்த்தால்....

'ராம்சுந்தர் ஒரு ஜெண்டில்மேன். அவருக்கு என்னைப் பிடிக்குமா?' என்று எழுதி யிருந்தது.

ஏதோ ஓர் ஆர்வ உந்துதலில் அந்தக் காகிதத்தை எடுத்து வைத்துக் கொண்டுவிட்டேன். அந்தக் காகிதம் இன்னும் என்னிடம் இருக்கிறது. மற்றபடி காதல், கீதல் இத்யாதிகளில் எனக்கு நம்பிக்கை இல்லை.

இப்போது என் கையில் என் மனைவி எவனுக்கோ எழுதிய கடிதம்.

யார் அவன்?

இனக்கவர்ச்சி என்று சொன்னவுடன் இன்னொருத்தியும் என் நினைவுக்கு வருகிறாள். வெளியில் சொல்லக்கூடாது. சொன்னால் வேலை போய்விடும் அபாயம்.

எங்கள் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் ரஞ்சனியைப் பற்றித்தான் சொல்கிறேன். அவள் நடை என்ன, உடை என்ன, நுனிநாக்கு ஆங்கிலம் என்ன... அழகான உயரம்.. பணக்காரப் பளபளப்பு... படிப்பறிவு விஷய ஞானம். இளம் வயது. பெரிய பதவி.

அவள் எங்களை எல்லாம் கூட்டி வைத்துக் கொண்டு மார்க்கெட்டிங் ஸ்ட்ராட்டஜியைப் பற்றி விலாவாரியாகப் பேசிக் கொண்டிருப்பாள் அடிக்கடி.

"ஐ டோண்ட் வான்ட் ஜஸ்ட் பர்ஃபார்மர்ஸ்! ஐ வான்ட் ஒன்லி அச்சீவர்ஸ் இன்மை கம்பெனி!" என எங்களை அடிக்கடி அதட்டுவாள்.

என் கனவுகளில் பலமுறை இந்த ரஞ்சனி வந்து தொலைத்திருக்கிறாள். தொல்லை தந்திருக்கிறாள். எனக்கும் என் கனவுக்கன்னி ரஞ்சனிக்கும் இடையில்தான் கோபி வருகிறான்.

"கோபி சாதனை படைக்க என்றே பிறந்தவன்" என்று எங்கள் எல்லோர் மத்தியிலும் ரஞ்சனி அவனை அடிக்கடி புகழ்வாள்.

ஒரு மார்க்கெட்டிங் கம்பெனியில் நான், கோபி, பூனைக்கண் பாலு எல்லோரும் சக ஊழியர்கள். ஒரு வேடிக்கை என்னவென்றால் நான், கோபி, பாலு எல்லோருமே ஒரே ஊர்க்காரர்கள். மாயவரம்.

ரஞ்சனிக்கு கோபியின் மீது ஒரு ஈடுபாடு இருப்பது நிதர்சனமாகத் தெரிந்தது. அந்த ஈடுபாடு கோபியின் அலுவலக சாதனைகளுக்கான அங்கீகாரமான, பாராட்டு வடிவ ஈடுபாடு மட்டும்தானா அல்லது அதற்கும் மேல் ஏதாவது ஒன்றா என்று நாங்கள் - குறிப்பாக நான் அடிக்கடி சிந்தனை செய்வதுண்டு.

போன வாரம் எங்கள் கம்பெனி, மார்க்கெட்டில் விலை போகாத ஒரு பிராண்ட் சோப்பை மார்க்கெட்டிங் செய்யும் ஒரு பேராசைத் திட்டத்தை எடுத்துக் கொண்டது. அதை எப்படி கவர்ச்சிகரமாக மார்க்கெட்டிங் செய்வது என்ற பூதாகாரமான பிரச்னை எங்கள் முன்பு. விளம்பரப் பொறுப்பும்



எங்களுடையது.

உடனே ஒரு மீட்டிங் வைத்துவிட்டாள் ரஞ்சனி. நாங்கள் எல்லோரும் ஐடியா சொல்லியாக வேண்டும்.

"சினிமா நட்சத்திரங்களின் ஸோப்" என்றேன் நான். "இனனொரு கம்பெனியின் விளம்பரத்தை காப்பி அடிக்காதே" என்றாள் ரஞ்சனி.

"அழகுக்கு அழகு சேர்க்கும் சோப்" என்றான் பாலு. "அழகாய் இல்லாதவர்கள் உபயோகிக்கக் கூடாத சோப்பா இது?" என்று அவனைச் சாடினாள் ரஞ்சனி.

இன்னும் சிலர் நாலந்து ஐடியாக்களைச் சொன்னார்கள். ஹெல்த் சோப், குடும்பத்திற் கேற்ற சோப், பாரம்பரியம் மிக்க புனிதமான சோப்.... எல்லாம் நிராகரித்தான் ரஞ்சனி.

இப்போது கோபியின் முறை. கோபியின் அணுகுமுறை என்னவென்று அறிய ரஞ்சனியைப் போலவே எங்களுக்கும் ஆசை. "சொல்லு, கோபி" என்றாள் ரஞ்சனி.

கோபி ஒரு அந்தக்கால கனவுக் கன்னியான சினிமா நடிகையின் பேரைச் சொல்லி, "மேடம், அந்த எக்ஸ் நடிகை இன்னமும் அந்தப் போட்டிக் கம்பெனியின் சோப்பைத்தான் உபயோகிக்கிறாளாம்" என்றான்.

"உபயோகித்தால் நமக்கென்ன. அவளைக் கூப்பிட்டு நமது இந்த சோப்புக்கு மாடலிங் செய்யச் சொல்லலாம் என்கிறாயா?" என்றாள் ரஞ்சனி. ஓரே சிரிப்பு. பயல் மாட்டிக் கொண்டான் என்று எங்களுக்கு ஓரே சந்தோஷம்.



ஆள் இல்லாத விமானத் தயாரிப்பில் இந்தியா வெற்றி பெற்று உள்ளது. "நிஷான்" என்ற பெயர் வைக்கப்பட்ட இவ்விமானம், எல்லையில் உளவு பார்க்க, படம் எடுக்கப் பயன்படுத்தப்படும். 1998 முதல் நமது ராணுவத்தில் இவ்விமானம் இணைக்கப்படும்.
— ஈ.டி. விஜயகுமார்

"இல்லை மேடம். சினிமா நடிகைகளின் சோப் என்றால் அதில் வயசு ஃபாக்டர் இடிக்கிறது பாருங்கள். எனவே வயசைக் கடந்த ஒரு கவர்ச்சியை நமது இந்த சோப்புக்கு வழங்க வேண்டும்" என்றான் கோபி.

"விஷயத்துக்கு வா" என்றாள் ரஞ்சனி.

"நாம் செய்யப் போவது என்ன என்றால் அழகான ஒரு இளைய மாடலிங் பெண்ணைக் காட்டுகிறோம். அது மிஸ் யுனிவர்ஸா, மிஸ் இண்டியாவா, மிஸ் தி. நகரா என்பது அப்புறம். நமது புரொஜக்ஷன் என்ன என்றால் அவளது கட்டான, இளமை பூரிக்கும் அழகு மேனி. அப்புறம் இந்த சோப்பு. வாசகம் என்ன தெரியுமா... என்றும் இளமை தரும் இதமான சோப்" என்றான் கோபி.

"வாரே வா" என்றாள் ரஞ்சனி. "ஐ லைக் இட்..... இதுதான் எனக்கு வேண்டும்" என்று பாராட்டியவள் எங்களைத் திரும்பிப் பார்த்தாள். அந்தப் பார்வையின் பொருள் "இது கூடத் தெரியாதா, மண்டுகளே!"

கோபியின் அடுத்த ஐடியாதான் அவனது மாஸ்டர் பீஸ்.

"மேடம், இந்த சோப்புக்கு நீங்களே கூட மாடலிங் செய்யலாம். பொருத்தமாவும் இருக்கும், நம் விளம்பரம் நம்பகமானதாகவும் இருக்கும்" என்றான் கோபி! போட்டானே ஒரு போடு. "சோப்பு, சோப்பு!" என்று என்னிடம் கிசுகிசுத்தான் பாலு.

கோபியின் ஐடியா அங்கீகரிக்கப்பட்டது.

**மா**டலிங் பற்றி கோபி சொன்ன யோசனையை செயல்படுத்துவதற்காக அடுத்தக் கட்ட வேலைகள் ஜரூராகத் தொடங்கின. விளம்பரப் படம் எடுக்க லொகேஷன் பார்க்க ரஞ்சனியும், கோபியும் (மட்டும்) கிளம்பிப் போனார்கள்.

மச்சம்டா கோபி, மச்சம் என்று நாங்கள் நினைத்துக் கொண்டோம்.

ஆனால் அவனது மச்சம் - ராசி - யோகம் பற்றி கோபிக்கே தெரியாது. அதுவும் தங்கப் புதையலின் மேல், அது தங்கப் புதையல் என்று அறியாமல் அமர்ந்திருக்கும் பிச்சைக்காரனைப் போல.....

ரஞ்சனியோடு சகவாசம் இல்லாத கோபியின் ஆரம்ப நாட்களில் நானும் கோபியும் மணிக்கணக்காகப் பேசுவது உண்டு.

அப்போது கோபி தன் கடந்தகால காதல் நினைவுகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறான் என்னிடம்.

சம்பந்தப்பட்ட அந்தப் பெண்ணின் பெயர் மட்டும் இதுவரை சொல்லவில்லை அவன். அவனது நண்பனின் சகோதரியாம். மகா லட்சுமி போல அழகாம். கோபியின் கவிதையால் இவள் ஈர்க்கப்பட்டிருக்கிறாள். "கவிதை சொல்லித்தா!" என்று கேட்டிருக்கிறாள். கவிதை சொல்லிக் கொடுத்துக் கொண்டே அவளைக் காதலிக்க ஆரம்பித்திருக்கிறான் கோபி.

சங்கீதம் கற்றுக் கொள்வது போல, எம்பிராய்டரி கற்றுக் கொள்வது போல கவிதையும் கற்றுக் கொள்கிறாள் போலும் என்று அந்தப் பெண்ணின் பெற்றோர்கள் அனுமதித்திருக்கிறார்கள்.

ஆனால் காதலைச் சொல்லிவிட மனசு வராமல் இருந்தானாம். புனிதமான காதலாம்; அடைகாப்பது போல் காதலைக் காக்க வேண்டுமாம். அவசரப்பட்டால் காதலின் புனிதமும், த்ரில்லும், சுகமும் போய்விடுமாம்.

"ஸில்லி!" என்றேன். "அப்புறம் என்ன ஆனாள் உன்னவள்?" என்றேன்.

"ஒரு வில்லன் வந்தான். வில்லன் என்றாலே மகா வில்லன். அவன் செய்யாத தப்புக் காரியமே கிடையாது.

"அந்த வில்லன் ஒருமுறை என்னவளை வழியில் மடக்கி கணக்குப் பண்ணப் பார்த்திருக்கிறான். 'ஐ லவ் யூ!' என்று சொல்லி அவள் கையைப் பிடித்து இழுத்திருக்கிறான். பார்த்தாலே பரவசம் ஊட்டும், நிலை குலையச் செய்யும் அழகு என்னவளிடம். பாவம், என்ன பண்ணுவான்?

"என்னவள் அவனை பளாரென்று கன்னத்தில் அறைந்துவிட்டு, அவன் தந்த கடிதத்தை சுக்குநூறாகக் கிழித்து எறிந்துவிட்டு வந்திருக்கிறாள். வீட்டில் போய் அழுதிருக்கிறாள்."

"அந்த வில்லன் யார்? அவனுடைய பேராவது சொல்லேன்" என்றேன் நான்.

"சொல்கிறேன். ஆனால் அவனிடம் போய் நடந்ததைக் கேட்கக் கூடாது. சத்தியம் செய்" என்றான் கோபி. செய்தேன்.

"அந்த வில்லன் ஒரு பூனைக் கண்ணன். அவன் பெயர் பாலசுப்பிரமணியன்" என்றான் கோபி. திடுக்கிட்டேன் நான். "நம்ப பாலு கூட பூனைக் கண்ணன்தான்" என்றேன்.

"ஆம். அவனேதான்" என்றான் கோபி.

"அப்புறம்?" என்றேன்.

"பிற்பாடு எனக்கு பாம்பேயில் வேலை

கிடைத்து என்னவளை விட்டுப் பிரிய முடியாமல் கிளம்பி விட்டேன். முதலில் சொந்தக் காலில் ஸ்திரமாக நிற்க கற்றுக் கொண்டு விட்டு, பிற்பாடு என் காதல் பெட்டகத்தைத் திறக்கலாம் என்றிருந்தேன்" - கோபி.

"ஏன் திறக்கவில்லை இன்றுவரை?"

"ஒரு நாள் என்னவளின் கல்யாண இன்விடேஷன் வந்து சேர்ந்தது. மணப் பையன் பெயர் நினைவில்லை. இன்விடேஷனைக் கிழித்துப் போட்டேன். என் காதல் பெட்டகம் களவு போன வெறுப்பில் அங்கே இங்கே அலைந்து... இப்போது இங்கே ரஞ்சனியின் கம்பெனியில்... உன்னோடு" என்றான் கோபி.

"வேறு எந்தப் பெண்ணையாவது கல்யாணம் செய்து கொள்வதுதானே?" என்றேன்.

"என்னுடைய அந்தக் காதலிக்கு முன்னால் உலகத்தின் எந்தப் பெண்ணும் ஈடாக முடியாது. அவளுடைய அழகைப் பார்த்த என் கண்களுக்கு வேறு எவளும் அழகாகவே தெரியவில்லை. எனவே இன்று வரை கல்யாணம் இல்லை. இனிமேலும் கிடையாது. ஏதோ நான் உண்டு, அவள் நினைவு உண்டு" என்றான் கோபி.

"பைத்தியம்டா நீ" என்றேன்.

"அப்படிப் பைத்தியமாக இருப்பதிலும் ஒரு சுகம் இருக்கே. நீ காதலித்தது இல்லை. காதலித்திருந்தால் தெரியும் உனக்கு" என்றான்.

என்னுடைய தொழில்முறைப் போட்டியாளனின் வாழ்வில் இப்படி ஒரு சோகம் இருப்பதில் எனக்கு சந்தோஷமா, புரியவில்லை.

**நா**ங்கள் எடுத்திருந்த சோப் விளம்பரம் 'கிளிக்' ஆகிவிட்டதைக் கொண்டாடுவதற்காக ஒரு பெரிய பார்ட்டிக்கு ஏற்பாடு செய்திருந்தாள் ரஞ்சனி. பார்ட்டியில் என் மனைவியை ரஞ்சனியிடம் அறிமுகப்படுத்தி வைத்தேன்.

"வீட்டில் உங்களைத் தொல்லைப் படுத்துகிறாரா ராம்சுந்தர். படுத்தினால் என்கிட்டே சொல்லுங்க" என்றாள் ரஞ்சனி, தன்னாடிய வண்ணம். லைட்டாக 'ஜின்' ஏற்றியிருப்பாளோ.

"என்ஜாய்!" என்றாள். தொடர்ந்து, "கோபி எங்கே... கோபி... கோபிக்கண்ணா!" என்று தொலைந்து விட்ட குழந்தையைத் தேடுவது போல தேடிக்கொண்டு போனாள் ரஞ்சனி. மனைவி அருவருப்புக் காட்டினாள்.

என் தோளில் ஒரு கை விழுந்தது.

திரும்பிப் பார்த்தேன்.

பாலு டிப்-டாப்பாக நின்றிருந்தான். "மேடம் செம பூஸ்ல இருக்காங்க போல இருக்கு இல்லே?" என்றவன்... "பை த பை! இதுதான் என் மனைவி அர்ச்சனா" என்று அறிமுகப்படுத்த...

கொள்ளிக் கட்டையை மிதித்தவன் போல திடுக்கிட்டேன்.

அர்ச்சனா....! இங்கே பாலுவின் மனைவியா? அர்ச்சனாவின் ஷார்ட்ஹாண்ட் புத்தகம் நினைவுக்கு வந்தது. (ராம்சுந்தர் ஒரு ஜெண்டில்மேன். அவருக்கு என்னைப் பிடிக்குமா?)

கல்யாணத்துக்குப் பிறகு அர்ச்சனாவிடம் இன்னும் அழகும், மெருகும் கூடியிருப்பதாகத் தோன்றியது. பயல் பாலு நன்றாக பாலிஷ் செய்து வைத்திருக்கிறான் இந்த ரோமன் சிலையை.

"ஹலோ!" என்றேன்.

"ஹலோ" என்றாள் அர்ச்சனா. அவளது பார்வையில் மின்னிய அந்தக் கேள்வி என்ன? 'என்னை ஞாபகம் இருக்கா? இல்லை... என்னை விட்டு விட்டாயேடா பாவி?'.. என்னவென்று சொல்லத் தெரியவில்லை.

ஏனோ அதற்குமேல் பாலுவின் அருகே நிற்கப் பிடிக்கவில்லை எனக்கு.




மனைவியை அழைத்துக் கொண்டு கோபிப் பயலைத் தேட ஆரம்பித்தேன்.

**ஆ**டம்பரமான பார்ட்டி. நிறைய விருந்தினர்கள். மேடையில் வெஸ்டர்ன் மியூசிக் ஆர்க்கெஸ்ட்ரா. மடோன்னா போல் ஒருத்தி, பாடி ஆடிக் கொண்டிருந்தாள்.

கோபி எங்கே?

தூரத்தில், உயரத்தில் மலைப் பாறைகள் போன்ற ஜோடனையில், செயற்கை அருவி வழிந்து கொண்டிருக்க, பளிங்கு சரஸ்வதி சிலை ஒன்று கலர் பல்புகளின் ரம்மியமான வெளிச்சத்தில் குளித்துக் கொண்டிருக்க.... அதற்கு அந்தப் பக்கம் ஒரு தலை தெரிய....

ஏறிப் போய் பார்த்தேன்.

கோபியேதான்! அடப்பாவி இது என்ன கோலம்?

வழக்கமான குறுந்தாடியுடன், இப்போது கலைந்த தலையும், வெளிறிய முகமுமாக... குடி போதையில் பித்துப் பிடித்தவன் போல அமர்ந்



"எல்லா அரசியல்வாதிகளையும் நம்ம ஆபீஸ் ஸ்டேனோ தோற்கடிக்கடுவா போலிருக்கு!"
"அப்படி என்ன பண்ணினா?"
"ஷார்ட்ஹேண்ட் மெசின் ரிப்போர்னு அப்பப்ப பணத்தை வாங்கி ஏப்பம் விட்டிருக்கா!"
— கிட்டு

திருந்தான் கோபி.

"கோபி, கோபி... என்ன இது? உன்னை அங்கே ரஞ்சனி தேடிக்கிட்டிருக்கா... இறங்கி வா... என் மனைவியும் வந்திருக்கிறாள்.. வா" என்றேன்.

தள்ளாடும் அவனை நான் தாங்கிப் பிடித்திருக்க, இறங்கினோம்.

"கோபி, இதுதான் என் மனைவி பரிமளா" என்றேன்.

"ஹாய்!" என்றான் கோபி.

"அய்யய்யோ, என்ன கோலம் இது" என்று அலறிய பரிமளா மூக்கைப் பிடித்துக் கொண்டு, ஓடாத குறையாக விலகிப் போய் ஆர்க்கெஸ்ட்ராவை வேடிக்கை பார்க்கப் போனாள்.

"என்ன கோபி இது. நீதான் இன்றைய ஹீரோ. உனக்கான வெற்றி விழா இது... பாவி, நாங்கள் எல்லாம் உன்னைப் பார்த்துப் பொறாமைப்பட்டுக் கொண்டிருக்கிறோம், நீ என்னடா என்றால்... இங்கே... இது என்னடா கோலம்" என்று கோபியை உரிமையுடன் கண்டித்தேன்.

"வென்றவன் இல்லை நான். ராம்சுந்தர், நான் தோற்றவன். மோசமாகத் தோற்றவன். ஜெயிக்கத் திராணி இல்லாமல் கேவலமாகத் தோற்றவன் நான்!" என்றான் கோபி குழறிய படி.

"என்னடா சொல்கிறாய் நீ?" என்று சற்று அதட்டினேன்.

"அவளைப் பார். அவளைக் கேள், ஏன் இப்படிச் செய்தாள் என்று" என்றான் கோபி.

"எவள் என்ன செய்தாள்?" - புரியாமல் கேட்டேன்.

"அர்ச்சனாவை... ஆமாண்டா பாலுவின் பெண்டாட்டி அர்ச்சனாவை... புனிதமான காதலை அவள் மேல் வளர்த்து வந்த என்னை நிராகரித்து விட்டு, ரௌடித்தனம் செய்து அடி வாங்கிய அவனைப் போய் கல்யாணம் செஞ்சுக்கிட்டாளே. அது ஏன் என்று அர்ச்சனாவைப் போய்க் கேள்..." என்று வெடித்து விம்மினான் கோபி.

அதிர்ந்தேன் நான். என்ன விதமான சக்கரம் இது? அர்ச்சனாவை கோபி விரும்பியிருக்கிறான்; அர்ச்சனா என்னை விரும்பியிருக்கிறாள். ஆனால் அவளை அடைந்தது என்னவோ பாலு!

நான் யோசித்துக் கொண்டிருக்கும் போது, கோபியைத் தேடிக் கொண்டு அங்கு வந்த ரஞ்சனி, "ஹேய் கோபி, உன்னை எங்கெல்லாம் தேடுவது? வா... லெட் அஸ் செலிபிரேட்" என்று அவன் கையைப் பற்றி இழுக்க....

"போடி...." என்று ரஞ்சனியின் கன்னத்தில் சீற்றத்துடன் அறைந்த கோபி, தள்ளாடிய படியே போய் வாசலில் காத்திருந்த ஓர் ஆட்டோவில் ஏறிப் போய்விட்டான்.

கோபி கோபமாக அடித்துவிட்டுப் போய் விட்ட உணர்வுகூட இல்லாமல் தள்ளாடிக் கொண்டிருந்த ரஞ்சனியை எனது மனைவி பரிமளா கைத்தாங்கலாகப் பிடித்து ரெஸ்ட்டிங் ரூமில் கொண்டு விட்டு வர....

என்ன நடந்தது என்று புரியாமல் பாலுவும் அர்ச்சனாவும், மற்றவர்களும் தூரத்தில் நின்றவாறு விழித்துக் கொண்டிருக்க...

நான் மனைவியுடன் வீடு வந்து சேர்ந்தேன்.

மனைவி தன் வேலைகளில் பிஸியாக இருக்க... நான் காதலின் பரிமாணம்... அல்லது பரிணாமம் பற்றிய குழப்பத்தில் சிந்தித்தவாறே எனது ஸ்டடி ரூமுக்குப் போய் அந்தக் கடிதத்தை எடுத்துத் திரும்பவும் பார்வையிட்டேன்.

'யாருக்கு எழுதியிருப்பாள் என் பரிமளா?'

புரட்டிப் பார்த்தேன். திருப்பிப் பார்த்தேன். கடிதம் யாருக்கு என்று தெரியவில்லை...

அட, இது என்ன... காகிதத்தின் மூலையில் ஏதோ பென்சில் கிறுக்கல்... கிறுக்கலா... ஏதோ ஷார்ட்ஹாண்ட் ஸ்ட்ரோக் போலத் தெரிகிறது... Kay... pee.... என்ன அர்த்தம்... இல்லை... இது ஜீ...பீ... ஜிப்?... அட இது உயிரெழுத்து இல்லாத Gopi... கோபி... கோபியேதானா...

பரிமளா மாயவரத்துக்காரியா? பக்கத்தில் ஏதோ ஊர் என்றார்களே.

கடிதம் கல்யாணத்துக்கு முன்பு எழுதப் பட்டதா இல்லை பின்பு எழுதப்பட்டதா? பரிமளாவின் கையெழுத்துதானே?

பார்ட்டியில் கோபியைக் கண்டு பரிமளா அலறியதும், ஓடியதும் விஸ்கி வாடையினால் மட்டும் இல்லையோ?

எனக்கு, கோபிக்கு, அர்ச்சனாவுக்கு என எல்லோருக்கும் கடந்தகாலம் என்று ஒன்று இருக்கிறது. பரிமளாவுக்கும் இருக்கக் கூடாதா என்ன?

அது கோபியாய் இருந்தால் என்ன கோவர்த்தனனாய் இருந்தால்தான் எனக்கு என்ன?

நான் - ராம்சுந்தர், என் மனைவி - பரிமளா.

அமைதியாக அந்தக் கடிதத்தைச் சுக்கலாகக் கிழித்துப் போட்டேன்.

எனக்கு சகோதரியும் கிடையாது... வளர்ப்பு மகனும் கிடையாது.... நீதான் எனக்கு எல்லாமே...

அ.தி.மு.க தொண்டர்



1996 செப்டெம்பர் 8
தாது ஆவணி 23
மலர் : 55
இதழ் : 6

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## போயஸ் தோட்டத்து போதிமரம்!

போயஸ் தோட்டத்து மரங்களில் ஒன்று போதிமரமாக இருக்குமோ என்னவோ... அதன் நிழலில் ஜெயலலிதாவுக்குத் திடீர் ஞானோதயம் பிறந்துவிட்டது!

எல்லோரும் அறிந்தும் தானறியாதிருந்த ஒரு பேருண்மையை, அம்மையார் அண்மையில் கண்டுபிடித்துக் கூறியிருக்கிறார்!

சசிகலா குடும்பத்தினர் செய்து வந்த அக்கிரமங்கள் பிரத்யட்சமாய் எல்லோருக்கும் தெரிந்தபோதிலும், தான் மட்டும் ஏமாந்து போனதாகவும் இப்போது விழித்துக் கொண்டுள்ளதாகவும் தெரிவித்திருக்கிறார்!

உண்மையைப் பேசுவதைக் காட்டிலும் இப்படிக் கூசாமல் கற்பனை செய்து பேசுவதற்கல்லவா அதிக சாமர்த்தியம் வேண்டும்! நாவல் இலக்கியத்துக்கான அடுத்த ராஜராஜன் பரிசு அம்மையாருக்குத்தான்!

சசிகலாவின் சகோதரர்கள், சகோதரி மகன்கள் ஈடுபட்டு வந்த ஹவாலா அக்கிரமங்கள் குறித்து, உளவுத்துறை தனக்குத் தெரிவிக்கத் தவறிவிட்டது என்கிறார் ஜெ. உளவுத் துறையையே உளவறிந்து இந்த விஷயத்தைக் கண்டறிந்த அவருக்கு, பத்மஸ்ரீ விருதை சிபாரிசு செய்ய வேண்டியதுதான்!




'உளவுத் துறையினர் சொல்லாவிட்டால் என்ன...? பத்திரிகைகளும் எதிர்க்கட்சிகளும் பத்தி பத்தியாய் எழுதியும் தொண்டை வறள எச்சரித்தும் நீங்கள், காதில் போட்டுக் கொண் டீர்களா...?' என்று வேறு சிலர் அசட்டுக் கேள்வி எழுப்புகிறார்கள்.

'பத்திரிகைகளும் எதிர்க்கட்சிகளும் எப்போதுமே அரசியல் காழ்ப்புணர்ச்சியும் பொறாமையும் கொண்டவையாயிற்றே! அவற்றை நம்பக்கூடாது' என்கிற ஆதாரமான சந்தேகம் ஏற்பட, ஜெ. அவற்றை நம்பாமல் போனதில் ஆச்சரியமென்ன?

'கடைசியில் பத்திரிகைகள் சொன்னதுதானே நிஜமாயிற்று. சசி குடும்பத்தினர் எக்கச் சக்கமான வழக்குகளில் மாட்டிக் கொண்டிருக்கிறார்களே..!' என்று நீங்கள் சாமர்த்தியமாக வாதாடுவதாக எண்ணி கேள்வி எழுப்புவீர்கள்.

சாட்டையடியாக பதில் வைத்திருக்கிறார் ஜெ. அதிபுரட்சிகரமான அறிவிப்பு.

'சசிகலா இனி என் உடன்பிறவா சகோதரி இல்லை; சுதாகரன் இனி என் வளர்ப்பு மகன் இல்லை!' என்கிற அறிவிப்பு!

'பன்னிரண்டு ஆண்டுகள் உடனிருந்து சுக-லாபங்களில் பங்கெடுத்துக் கொண்ட வருக்கு இப்படி ஒரு பொது அறிவிப்பின் மூலம் 'தலாக்' சொல்லுவது துரோகம் இல்லையா...?' என்று சில இளகின மனசுக்காரர்கள் கேட்கிறார்கள்.

'அடிக்கிற மாதிரி அடிக்கிறேன் அழுகிற மாதிரி அழு...' என்ற விளையாட்டு ஜெயலலிதாவுக் குத் தெரியாதா என்ன...!

சில கல்நெஞ்சக்காரர்கள் வேறு கண்கொண்டு விமர்சிக்கிறார்கள். ஏமாற்று, மோசடி கும்பலுக்குச் சலுகை காட்டித் துணை போய்விட்டு, இப்போது பதவி போனபிறகு, மாட்டிக்

உலக மகா ஊழல் போட்டி

கொண்டு விடுவோம் என்ற பயத்தில் செயல்படுகிறார் ஜெ. கட்சியைத் தக்கவைத்துக் கொண்டு, மக்களின் அனுதாபத்தைப் பெற, அவர் ஆடும் நீலி நாடகம் இது... என்றெல்லாம் முட்டாள்தனமாக வாதாடுகிறார்கள்.

இதற்கெல்லாம் பயப்படுபவர் அல்ல மிஸ் முன்ஜாமீன்! நீதி நிர்வாகம் இப்போது செயல்படும் ஆமை வேகத்திலேயே தொடர்ந்தால் தம் பேரிலுள்ள குற்றச்சாட்டுகளையெல்லாம் மக்கள் நாளடைவில் மறந்து விடுவார்கள் என்பது அவருக்கா தெரியாது! சாவகாசமாகத் தொடரப்படக் கூடிய வழக்குகளை அடுத்த தேர்தல் வரை இழுத்தடிக்கத்தானே டில்லியிலிருந்து ஸ்பெஷல் வழக்கறிஞர்களை வரவழைத்திருக்கிறார்!

'சரி, நீதி நிர்வாகத்தைத் துரிதப்படுத்தி, சிறப்பு நீதிமன்றம், காலக்கெடுவுக்குட்பட்ட தீர்ப்பு என்றெல்லாம் தமிழக முதல்வர் சுறுசுறுப்புக் காட்டினால் ஜெ. காலிதானே...!' என்று அவருடைய எதிரிகள் சிலர் கெக்கலிக்கிறார்கள்.

கைது, ரிமாண்டு, சிறைவாசம், வழக்கு, விவாதம், தீர்ப்பு, தண்டனை என்று எது வந்தாலும் அதைச் சாதகமாக்கிக் கொண்டு, மக்களின் அனுதாப அலையைப் பெற ஜெயலலிதாவுக்குக் கற்றுத்தர வேண்டுமா என்ன...?

'ஐயய்யோ! அப்படியானால்... தமிழகத்தில் மீண்டும் அம்மையார் ஆட்சி உருவாக வாய்ப்பி ருக்கிறதா...?' என்று சில நேர்மையாளர்கள் நிஜமாகவே கவலைப் படுகிறார்கள்....

அவர்களுடைய கவலை மறைய வேண்டுமானால், தம் பிறந்த நாளுக்குத் தமிழகமெங் கும் மரம் நடச் செய்த முதல்வர் கருணாநிதி, உடனடியாக கோபாலபுரத்தில் ஒரு போதி மரத்தை நடச்செய்ய வேண்டியதுதான்!

# ஜாதி இல்லாமல் ஓர் இனம்!

## ஆங்கிலோ – இந்தியர்களின் வாழ்க்கை இப்போது பொருளாதார ரீதியாகப் பின்னடைந்து வருகிற சோகத்தில்தான் இருக்கிறது....

அட்டையில் உள்ள இளம் பெண்மணி கேரின் பீல். சிங்கப்பூர் ஏர்லைன் ஸில் பணிபுரிகிறார். கூட இருப்பவர் கேவின் பெர்னான்டஸ். சொந்த வியாபாரம். இந்தப் புகைப் படத்தை எடுக்க உதவி செய்த அந்த இளம் பெண்ணின் தாயிடம், "இவர்களுக் குத் திருமணம் நடக்க விருப்பதாகக் கேள்விப்பட்டோம். இருவருக்கும் இடையே என்கேஜ்மன்ட் ஆகிவிட்டதா?'' என்று கேட்டதும், சரளமாக வந்தது பதில்.

''நீங்கள் கேள்விப் பட்டது தவறு. இருவரும் நெருங்கிய நண்பர்கள். தன் பாய்பிரண்ட் என்றுதான் கேவினை அறிமுகப்படுத்தியிருக்கிறாள் என் மகள். இரண்டு பேருக்கும் ஒத்துப் போனால் இரண்டு வருடங்கள் கழித்துத் திருமணம் நடக்கும்.''

நம்மில் சிலருக்கு ஒரு பெண்ணின் தாய் இப்படி கூறுவது கொஞ்சம் அதிர்ச்சியாக இருக்கலாம். ஆனால் ஆங்கிலோ இந்திய இனத்தில் மிகப் பெரும்பான்மையான திருமணங்கள், காதல் மணங்கள் தான். அந்த சமூகத்தைச் சேர்ந்த பெற்றோர்கள் மேஜராகிவிட்ட தங்கள் மகன் மற்றும் மகளுக்கு முழு சுதந்திரம் கொடுப்பதை கடமையாகவும் பெருமையாகவும் எண்ணுகிறார்கள்.

இதைப் புரிந்து கொண்டால்தான், "நம்ம பாரம்பர்யதுக்குத் தகுந்த மாதிரி அழகா கவுன் போட்டுக்காம, இப்படி ஏன்தான்



• டாக்டர் பீட்ரிக்ஸ்

அசட்டுத்தனமா புடைவையைக் கட்டிக்கிட்டு நிக்கறியேன்னு என் பாட்டி சொல்வதுண்டு!" என்று தரமணி பகுதியில் வசிக்கும் திருமதி லாரன் டிஸோஸா கூறுவதையும் புரிந்து கொள்ள முடியும். சரளமாகத் தமிழ் பேசுகிறார் இவர். போர்டிங் பள்ளியில் படிக்கும் தன் தங்கை இன்னமும் கவுன் அணிவதாகவும், 'இன்னா ஒனும் உன்க்கு?' என்பது போன்ற 'மரியாதை இல்லாத' உடைந்த தமிழைப் பேசுவதாகவும் கூறுகிறார்.

நானூறு ஆண்டுகள் ஆகிவிட்டன ஆங்கிலோ இந்திய பரம்பரை இந்தியாவில் காலூன்றி.

"எங்களை இரு ஜாதியை சேர்ந்தவர்கள் (Half caste) என்று சிலர் கூறுவதுண்டு. மற்ற சமூகத்தை சேர்ந்தவர்களிடையே (கிறிஸ்துவர்கள் உட்படத்தான்) ஜாதிகள் நிலவிக் கொண்டிருக்க, எங்கள் இனத்தில் மட்டும் ஜாதிகளே இல்லை. சொல்லப்போனால் எங்களைத்தான் 'தேசிய இனம்' என்று சொல்ல வேண்டும். எங்கள் தாய்மொழி ஆங்கிலம்தான் என்றாலும் இந்தியாவின் பல்வேறு மாநிலங்களில் வசிக்கும் எங்கள் இனத்தவர், அந்தந்த மாநில வாழ்க்கை முறையோடு கலந்து விடுவது தான் வழக்கம்!" என்கிறார் டாக்டர் பீட்ரிக்ஸ் டிஸோஸா. மாநில கல்லூரியில் பேராசிரியையாக இருந்து ஓய்வு பெற்றவர். சமீப காலம் வரை தங்கள் இனப்பிரதிநிதியாக சட்டசபையில் இடம் பெற்ற இவர், இப்போது மாநில சிறுபான்மையினர் கமிஷனின் தலைவர். "எங்கள் இனத்தவர் ஆஸ்திரேலியாவில் குடியேறினால்கூட, 'ஆஸ்த்ரேலிய ஆங்கிலோ இந்தியர்' என்று அழைக்கப்படுவதையே விரும்புகிறார்கள். அந்த அளவு நாங்கள் இந்தியாவை நேசிக்கிறோம்" என்கிறார்.


• திருமதி வாரன் டிஸோஸா


• கணவருடன் காஸ்ரன்

தொழிற்கல்வி கூட படிக்கிறார்கள்" என்கிறார் திருமதி. டி. மாண்டி. இந்திரா நகரில் பள்ளிக்கூடம் ஒன்றை நடத்துபவர்.

எனினும் அவரது மகன் எரில் பள்ளிப் படிப்போடு நின்று விட்டார். "கல்லூரிக்குப் போக வேண்டுமென்று தோன்ற


• ஆலிஸ் குடும்பத்தினர்...

ஆங்கிலோ இந்திய இனத்தில் முக்கியமாக ஆண்கள்-கல்விக்குப் போதிய முக்கியத்துவம் கொடுப்பதில்லை என்ற குற்றச்சாட்டு உண்டு. "அதெல்லாம் போன தலைமுறைக்கு வேண்டுமானால் பொருந்தும். இப்போது எங்கள் குழந்தைகள்

# எறும்பார் கடிக்கிறார்.....

**"ஹீரோயினுக்கு நடிப்புன்றது தேவையில்லாம போயிருச்சு. இது இப்போ பரிதாபமான விஷயம்."**
**- பாரதிராஜா**




●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

வில்லை. இன்டீரியர் டெகரேஷன் செய்கிறேன். கிறிஸ்துமஸ் போன்ற விழா சீஸன்களில் கணிசமாக சம்பாதிக்க முடிகிறது" என்கிறார் இவர்.

ஒரு காலத்தில் ஆங்கிலோ இந்திய இனத்தவருக்குப் பனிச்சென்று இருந்த வேலை வாய்ப்பு இப்போது குறைந்துதான் போய் விட்டது. முன்பெல்லாம் ரிசப்ஷனிஸ்ட், அந்தரங்கக் காரியதரிசி, ஏர்-ஹோஸ்டஸ் ஆகிய வேலைகளில் ஆங்கிலோ-இந்தியப் பெண்மணிகள்தான் முன்னணியில் இருந்தார்கள். அவர்களது தடையில்லாத ஆங்கிலமும், பனிச்சென்ற தோற்றமும் இதற்கு உதவின. ஆனால் மற்ற இனப் பெண்கள் மத்தியிலும் வேலைக்குப் போகும் பழக்கம் அதிகமானதோடு, சரளமான ஆங்கிலம் என்பது மற்றவர்களுக்கும் நாவந்த கலையாகி வருவதால் போட்டி அதிகமாகி விட்டது. தவிர ஆங்கிப் புலமையோடு பல்வேறு மொழிகளின் பரிச்சயமும் இது போன்ற பணிகளுக்கு அவசியமாகி விட்டது.

ஆங்கிலேயர்கள் ஆண்ட காலத்தில் ரயில்வே, தபால்- தந்தி போன்ற பல துறைகளில் கோலோச்சி வந்தது ஆங்கிலோ-இந்தியர்கள்தான். அப்போது 'பள்ளிப் படிப்பை முடித்தால் போதும் அவர்களுக்கு நிச்சயம் இவற்றில் வேலை உண்டு' என்ற நிலை. பாராளுமன்றத்தில் ஆங்கிலோ இந்தியர்களுக்கு இரண்டு உறுப்பினர் (நாமினேடட்) பதவி உண்டு என்பது சட்டமாக்கப் பட்டது. சுதந்தரமடைந்தபோது இருந்த ஒவ்வொரு மாநில சட்டசபையிலும் கூட ஒரு ஆங்கிலோ-இந்திய உறுப்பினர் தேர்தலின்றியே இடம் பெற அனுமதிக்கப் பட்டனர். மத்திய அரசு நிறுவனங்களிலும் வேலை வாய்ப்புகளில் ஆங்கிலோ இந்தியர்களுக்கு ஒதுக்கீடு இருந்தது.

ஆனால் 1960ல் 'பாராளுமன்ற/சட்டசபைகளில் இட ஒதுக்கீடு; அல்லது மத்திய அரசு நிறுவனங்களில் வேலைவாய்ப்பு ஒதுக்கீடு- இவையிரண்டில் ஒன்றுமட்டுமே இனி ஆங்கிலோ இந்திய இனத்தவருக்கு அனுமதிக்கப்படும்' என்ற நிலை உருவானது. தங்கள் இனத்தவர்களின் பிரதிநிதிகள் நாடாளுமன்றம் மற்றும் சட்டசபையில் இடம்பெற வேண்டும் என்பதற்கே முன்னுரிமை தந்தார்கள் ஆங்கிலோ இந்திய இனத்தலைவர்கள்.

வேலைவாய்ப்புகள் குறைந்துபோக, இன்று தமிழகத்தில் உள்ள ஆங்கிலோ இந்திய சமூகத்தில் பெரும்பான்மையானவர்கள் பொருளாதாரத்தில் மிகவும் பின்னணியில் இருக்கிறார்கள்.

"எங்கள் இன மக்கள் கடும் உழைப்பாளிகள். நேர்மையானவர்கள். எதையும் வெளிப்படையாகப் பேசுபவர்கள். அதே சமயம் எங்களுக்கென்று சில மரபுகள் உண்டு. உதாரணமாக நடனமாடுவதை (Ball Dance) ஒரு மகிழ்ச்சியான விஷயமாக எண்ணுகிறோம். இதில் அவமானப்பட எதுவும் இருப்பதாக நாங்கள் எண்ணுவதில்லை. நாங்களும் இந்தியர்கள்தான். 'அன்பே கடவுள்' என்றுதான் எல்லா மதங்களும் போதிக்கின்றன. அப்படியிருக்க எங்களை தனிமைப்படுத்துவது நியாயம் அல்ல'' என்கிறார் வங்கியொன்றில் பணிபுரியும் திருமதி. ஆலிஸ்.

தம்முடைய மனக்குமுறலை தடையின்றி வெளிக்கொட்டினார் மற்றோர் ஆங்கிலோ இந்திய சகோதரி. "நாங்கள் தெருவில் நடந்து சென்றாலே பலவித கேலிப்பேச்சுகளை கேட்க வேண்டியிருக்கிறது. அதுவும் எங்கள் ஒழுக்கத்தையே களங்கப்படுத்தும் விமர்சனங்கள்! எங்கள் உடைகள் மாறுபட்டு இருப்பதாலேயே இப்படி ஒரு முடிவுக்கு வரலாமா? எங்கள் இனத்திலும் ஒழுக்க மீறலை சகஜமாக எடுத்துக்கொள்ளும் பெண்கள் உண்டுதான். ஆனால் இப்படிப்பட்டவர்கள் எல்லா இனங்களிலும் தானே உண்டு. எங்களுக்கு வீடு வாடகைக்கு சுலபத்தில் கிடைத்துவிடாது. 'சட்டைக்காரிகளுக்கெல்லாம் வீடு கிடையாது' என்று முகத்தில் அடிப்பதுபோல் பலர் கூறக்கேட்ட அனுபவம் எனக்கு உண்டு!"என்று அவர் சொல்லியதைக் கேட்க கஷ்டமாகத்தான் இருந்தது.

இளையதலைமுறைப் பெண்கள் புடவை, கவுன் ஆகிய இரண்டுக்கும் இடைப்பட்ட உடைக்கு மாறிவருகிறார்கள். "சுரிதார் சௌகரியமாகவும் இருக்கு. தனிப்படுத்தியும் காட்டுவதில்லே" என்று சொல்லும் கரோலின் கல்லூரி மாணவி. சக மாணவிகள் வித்யாசம் இன்றிப் பழகுகிறார்கள் என்றாலும் வருங்காலத்



"நாம செத்தா ஊரே அழற மாதிரி இருக்கணும்."
"அதுக்காக ஊர் முழுக்க கடன் வாங்கி செலவழிச்சுக்கிட்டே இருக்கணுமா?"

– சீர்காழி
வி. ரேவதி

தில்- முக்கியமாக வேலை தேடும் காலத்தில் வித்தியாசம் தலைதூக்கும் என்று கவலைப்படுகிறார்.

"திரைப்படங்களில் எங்கள் இன ஆண்களை வில்லன்களாகவும், எங்கள் இனப் பெண்களை ஒழுக்கம் கெட்டவர்களாகவும் மட்டுமே ஏன் காட்ட வேண்டும்?" என்று கேட்கும் கரோலினின் கேள்வியில் நியாயம் இருக்கிறது.

இவர்கள் இனத்தில் பெண்ணோ, பிள்ளையோ திருமணம் ஆனவுடனேயே தனிக் குடித்தனம் தொடங்கி விடுவதால், முதியவர்கள் தனிமையில் தவிப்பது பரவலான ஒன்று.

"பெரும்பாலும் காதல் திருமணங்கள் தான் என்பதற்கு, எங்கள் இனத்தில் ஜாதகமோ, திருமணத் தரகர்களோ இல்லையென்பதும் முக்கிய காரணங்கள்" என்று சொல்லும் பிரின்ஸ், தங்கள் மக்களுக்கான சலுகைகளை, தங்கள் இனத்தின் சில தலைவர்கள் சரியாக எடுத்து சொல்வதில்லை என்பதையும் குறிப்பிட்டார்.

சகோதரிகள் சம்பந்திகளாவது இவர்களிடையே அனுமதிக்கப்படுகிறது. தமிழகத்தைப் பொறுத்தவரை கத்தோலிக்கப் பிரிவைச் சேர்ந்தவர்கள் இவர்களிடையே எண்ணிக்கையில் அதிகம்.

"உல்லாச விரும்பிகள்" என்ற இமேஜ் ஆங்கிலோ இந்திய சமூகத்தின் மீது அழுத்தமாகவே விழுந்திருக்கிறது. இசை அவர்களது வாழ்வின் முக்கிய அங்கம். ஆஸ்பெஸ்டாஸ் ஷீட்டின் கீழ் வசிப்பவர்களின் குட்டி வீடுகளிலும் கூட மியூசிக் சிஸ்டத்தையும், ஃப்ரிஜ்ஜையும் எதிர்பார்க்கலாம். மதுப்பழக்கம் மறைக்க வேண்டிய ஒன்று என இவர்கள் நினைப்பதில்லை. குழந்தைகளுக்கு இப்பழக்கத்தை சிபாரிசு செய்வதில்லையென்றாலும், அவர்கள் எதிரிலேயே மிதமான அளவில் மது அருந்துவதைப் பெரியவர்கள் தவறாகக் கருதுவதில்லை.

பெரும்பாலானவர்களின் வீடு- முக்கியமாக் கூடம்- வெகு அக்கறையுடன் கலையுணர்வுடன் பராமரிக்கப்படுவதைக் காணலாம்.

விசேஷ நாட்களை கோலாகலமாகக் கொண்டாட மிக விருப்பம். "ஈஸ்டர், கிறிஸ்துமஸ், திருமணநாள், குடும்பத்தினரின் பிறந்த நாட்கள் எல்லாவற்றையும் கொண்டாடுவோம். பணம் பத்தலேன்னா கடன் வாங்கியாவது கொண்டாடுவோம்" என்கிறார் வாரன். பல வீடுகளில் ஒவ்வொருவருக்கும் ஆண்டுக்கு இப்படி ஐந்து செட் உடைகளாவது வாங்கப்படுகின்றன.

இப்படி தனித்துவங்கள் இருந்தாலும் மாறுதலுக்கும் கணிசமானவர்கள் தயார். கோர்டான் ஸ்மித்தை திருமணம் செய்து கொண்டிருக்கும் கான்ரன், புடைவையோடு தாலியையும் அணிந்திருக்கிறார். கேட்டால் "எங்க அப்பா சைடு இந்தியர்கள். புடைவையோடு கழுத்தில் தாலியும் இருந்தா ஒரு பாதுகாப்புன்னு எங்க அத்தை சொன்னாங்க. கோர்டான் சம்மதிக்கவே, மோதிரம் மாத்திக்கிட்ட கையோடு தாலியும் கட்டிக்கிட்டேன்" என்கிறார்.

ஆங்கிலோ-இந்திய கூட்டணி அமைப்புகள் பொருளாதாரத்தில் பின்னடைந்த தங்கள் இனத்தவருக்கு- முக்கியமாக முதியவர்களுக்கும் விதவைகளுக்கும்- ஓரளவு உதவுகின்றன. பொருளாதாரத்தில் நலிந்தவராகத் தென்பட்ட டியோடரிடம் (தொலைபேசி இலாகாவில் பணிபுரிகிறார்) "உங்கள் அஸோசியேஷன் உங்களுக்கு உதவுதா?" என்று நாம் கேட்க, "அவங்க எதுக்கு எனக்கு உதவணும்? நான் வேணா அவங்களுக்கு உதவத் தயார்" என்றார் பனிச்சென்று!

"நர்ஸுகள், ஆசிரியைகள், டாக்டர்கள் என்று சேவை தொடர்பான பணிகளைத் தான் எங்கள் இனத்தவர் தேர்ந்தெடுத்து வந்திருக்கிறார்கள். இன்றைய போட்டி யுகத்தில் இந்த நிலையைக் கொஞ்சம் மாற்றுவதற்காக எங்கள் குழுவின் மூலம், ஆஸ்திரேலியாவிலிருந்து கிடைக்கும் நிதி உதவியுடன், வியாபாரத்தில் ஈடுபடுவதற்காக சுமார் 25 லட்சம் ரூபாயை பலருக்குக் கடனாக அளித்து வருகிறோம்" என்றார்.

கடைசியாக ஒரு முக்கிய தகவல். இந்திய அப்பாவுக்கும் ஆங்கிலோ அம்மாவுக்கும் பிறப்பவரை நம் சட்டம் 'ஆங்கிலோ இந்திய'ராகக் கருதுவதில்லை. ஆங்கிலேய ('ஐரோப்பிய' என்பதுதான் அதிகப் பொருத்தம்) ரத்தம் அப்பா தரப்பிலிருந்து வந்திருக்க வேண்டும்.

- ஜி.எஸ்.எஸ்.

படங்கள்: பேஜர் கே. மூர்த்தி

# காதல்தேசம்

இரண்டு கல்லூரிப் பையன்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கிறார்கள். அவள், இருவரையும் கடைசியில் நண்பர்களாக மட்டும் அங்கீகரிக்கிறாள் என்ற இரண்டு வரிக் கதை. இதை வைத்துக் கொண்டு என்னவெல்லாம் பண்ணலாம்?

மகாபலிபுரக் கடற்கரை மணலில் வானளாவிய கல்லூரிப் பிரதேச செட் போடலாம். லட்சம் பூக்கள் கொட்டிச் சிரிக்கும் மரங்கள் நட்டு, நடுவே தபுவை மிதக்கவிட்டு மயக்கலாம். கலர்க் கலராக உடை போட்டுக் கொண்டு கனவு பாடலாம். வடிவேலுவை விட்டு, கொஞ்சம் சிரிப்புக் காட்டலாம். ரஹுமானைக் கொண்டு, போதையூட்டலாம். கே.வி. ஆனந்த் கேமராவுக்கு இரண்டாவது தேசிய விருது வாங்கித் தரலாம்.

தமது முந்தைய இரு படங்களின் பாணியை மொத்தமாகக் கழற்றி வைத்துவிட்டு, நூறுசதம் கமர்ஷியல் சமரசத்துக்குத் தயாராகி விட்டார் டைரக்டர் கதிர். ஆனாலும் கொசைக்கும் ஆபாசத்துக்கும் அரைகுறை உடை ஆட்டங்களுக்கும் நிறைய வாய்ப்பிருந்தும் அவற்றின் பக்கம் ஒதுங்காத கண்ணியம், அவரது தரத்தைக் கட்டிக் காத்து, கடை விரிக் கிறது; சந்தோஷத்துடன் பாராட்டத் தோன்றுகிறது.

பொதுவாக இரண்டு ஹீரோக்கள், ஒரு ஹீரோயின் விஷயம், இங்கே மக்களுக்கு அஜீரணம் தரக்கூடியது. ஆனால், இது சினிமா என்கிற நினைவே வராமல் பாத்திரங்களோடு கரைந்து போகிறபடிக்குச் செய்திருக்கிற நேர்த்தி, கிறங்க வைக்கிறது.

படத்தில் வாலியின் பங்கு, கணிசமானது. பல வருஷங்களுக்குப் பின் பழைய வாலி! அர்த்தமும் கவித்துவமும் எழிலும் துள்ளலுமாக, சந்தர்ப்பங்களுக்குப் பொருந்தி வருகின்றன, மூன்று பாடல்கள். (மேலும் இரண்டில் இன்றைய வாலி.)

தமிழுக்குப் புதிதாக மூன்று பேர் இந்தப் படத்தில் அறிமுகமாகியிருக்கிறார்கள். அப்பாஸ், தபு, கே.வி. ஆனந்த். ஆனந்தைப் பற்றி முன்பே சொல்லியாகிவிட்டது.

நர்சரியிலிருந்து நேரடியாக எழுந்து நடிக்கவந்தாற்போல இருக்கிறார் அப்பாஸ். சண்டைகள் சரி. நடிப்பு? அப்பாஸ் பாஸ் ஆக, நிறைய உழைக்க வேண்டும்.

தபு. லட்சங்களை விழுங்கிய செட்களுக்கும் படத்தில் அடிக்கடி காட்டப்படுகிற அந்த வெளிர் சிவப்புப் பூசல்களுக்கும் அழகு கொடுப்பதற்காக பம்பாயிலிருந்து வந்திருக்கிறார். அந்தத் தேனில் தோய்த்த புன்னகைக்காக மட்டும் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

தேவையே இல்லாத அந்த வில்லன் ட்ராக், குஞ்சுமோனின் நடிக்கிற ஆசைக்காகவே உருவாக்கப்பட்ட அந்த போலீஸ் கமிஷனர் மாணவர்களுக்கு அறிவுரை சொல்லும் டாப் கிளாஸ் நகைச்சுவைக் காட்சி, வடிவேலு ஒரு ரூபாயில் சினிமா காட்டுகிற 'நறநற' – இதையெல்லாம் தவிர்த்திருக்க வேண்டும். கூட்டியிருக்க வேண்டியது, இன்னும் கொஞ்சம் வேகம்.

\- ஆர்.பி.ஆர்.

● முன்னாள் பிரதமர்களுக்கு, காபினெட் அமைச்சர் அந்தஸ்து கொடுக்கப்பட இருப்பதாக ஒரு மூன்று வரிச் செய்தி வந்ததை யாரும் கவனித்திருக்க மாட்டார்கள். காபினெட் அமைச்சர் அந்தஸ்து கொடுக்கப்பட்டால், அவர்கள் கைது செய்யப்பட, அரசின் அனுமதி வேண்டும். ராவ் கைது செய்யப்படும் நிலை உருவானால், அதிலிருந்து அவரைத் தப்புவிக்கவே இந்த யோசனையை தேவே கௌடா ஏற்றுக் கொண்டாராம்!

இதற்கும் ஒருபடி மேலே போய், இரண்டாவது பிரதான எதிர்க்கட்சியான காங்கிரசைத் திருப்திப் படுத்த, இன்னொரு யோசனை அரசின் பரிசீலனையில் இருக்கிறதாம். பிரணாப் முகர்ஜி (ராஜ்ய சபா உறுப்பினர்)க்கும், லோக் சபா காங்கிரஸ் கொறடா சந்தோஷ் மோகன் தேவுக்கும், எதிர்க்கட்சித் தலைவர் அந்தஸ்தைக் கொடுத்துச் சந்தோஷப்படுத்தலாமா என்ற யோசனைதான் அது.

● குடியரசுத் தலைவர் சங்கர் தயாள் சர்மா 'இனியாவது நான் முன்னால் குறிப்பிட்ட ஐந்து நாடுகளுக்கும் போய் வரலாமா?' என்று ஐக்கிய முன்னணி அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப் பயணத்தின்போது தமது உடல்நிலையைப் பரிசோதித்துக் கொள்ளும் எண்ணமும் சர்மாஜிக்கு இருக்கிறது. இதைக் கேள்விப்பட்டு, "நானும் அயல்நாடுகளுக்கு, மெடிகல் செக் அப் செய்து கொள்ளப் போகலாமா?" என்று நரசிம்ம ராவ் கேட்கிறாராம்.

● அமீர்பாயை இந்தியாவுக்குக் கொண்டு வரும் விஷயமாக மட்டுமே சி.பி.ஐ. அதிகாரி ஜோகிந்தர் சிங், ஹாங்காங் போய் விட்டு வந்தார் என்று யாராவது நினைத்திருந்தால், தயவு செய்து அதைத் திருத்திக் கொள்ள வேண்டும்! ஹாங்காங் இந்திய தூதரக அதிகாரிகளின் கூற்றுப்படி, "அவர் வந்தது, நம் இரு நாடுகளுக்கிடையே ஆன ரகசிய போலீஸ் துறை சம்பந்தப்பட்ட விஷயங்களில் பேச்சு வார்த்தை நடத்தத்தான்!" சிங், முன்னாள் பிரதமர் நரசிம்ம ராவுடன், அவர் காரிலேயே ஏறி, அவர் வீட்டுக்கே போய், ஒரு மணி நேரத்துக்கு அவரிடம் பேசியது கொஞ்சம் கூடச் சரியல்ல என்று எல்லா எதிர்க் கட்சிகளும் கூவுகின்றன. "நான் அவரிடம் ஆசிகள் வாங்கவும் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று வழிமுறைகள் கேட்டுக் கொள்ளவும்தான் போனேன்" என்கிறார் ஜோகிந்தர் சிங். வாஜ்பாயியிடமும், வி.பி.சிங்கிடமும் ஜோகிந்தர் சிங்கின் 'ஆசிகள் பெறும் முயற்சி' பலிக்கவில்லை. சந்திக்க முடியாது என்று மறுத்து விட்டனர்!

● சென்னையில் ரௌடி கும்பலை சினிமா பாணியில் துரத்திச் சுட்டுக்கொன்ற நிகழ்ச்சியைப் போலவே, பம்பாய் ரௌடி கும்பலின் 'தாதா' வாகக் கருதப்படும் அமர் நாயக்கையும் பம்பாய் போலீசார், அதிரடி பாணியில் சுட்டுக் கொன்றிருக்கின்றனர். அமர் நாயக், சிவசேனை அனுதாபி என்பது பால்தாக்கரேவுக்கு ஒரு புதிய தலைவலியைக் கிளப்பி விட்டிருக்கிறது!

● யுவ ஜனதா தள மாநாட்டில் பங்கேற்றுக் கொண்ட பிரதமர் தேவே கௌடா, தில்லியிலேயே 'குண்டு சட்டியில் குதிரை யோட்டும்' ஜனதா தளத் தலைவர்களை ஏகமாகக் கடிந்து கொண்டார். 'உங்கள்


• சந்திரசுவாமி

# முன்னணி ஒதுக்கும் தமிழ்நாட்டு ஐ.ஏ.எஸ்கள்!

# தில்லி நியூஸ்

தொகுதிகளுக்குச் சென்று மக்களைச் சந்திக்காமல் இப்படி தில்லியிலேயே கும்மாளம் போடுகிறீர்களே!' என்று சரவெடி மாதிரி வெடித்திருக்கிறார். குறிப்பாக கட்சித் தலைவர் சரத்யாதவ் மீது ஒரேயடியாகப் பாய்ந்தார் தேவேகௌடா - 'ஒவ்வொரு மாநிலமாகப் போய்க் கூட்டம் நடத்தக் கூடாதா?' என்று கொதித்துப் போய்க் கேட்டிருக்கிறார்.

● தில்லி

* ராவ்



யில் அகில இந்திய ஐ.ஏ.எஸ். அதிகாரிகளின் பட்டியலும், விலாசமும் கொண்ட புத்தகம் ஒன்று தயாரித்திருக்கிறார்கள். அதில் தமிழ்நாட்டு ஐ.ஏ.எஸ் அதிகாரிகளின் எண்ணிக்கைதான் அதிகம் - 300. அதிலும் விசாரணைக்கு உட்பட்டிருக்கும் ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் லிஸ்ட்டில் தமிழ்நாடுதான் முதல். ஜெயிலில் இருக்கும் இரண்டு ஐ.ஏ.எஸ். அதிகாரிகளையும் அதில் தனியே - பெயர் குறிப்பிடாமல் வெளியிட்டிருக்கிறார்கள்!

● பிரதமரின் செயலகத்துக்கு உட்பட்ட டிபார்ட்மெண்ட் ஆஃப் பெர்ஸானல் அலுவலகத்தில் ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகள் மீது வந்த ஏகப்பட்ட புகார்கள் பரிசீலனையில் இருக்கின்றன. 80 ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மீதுள்ள புகார்கள் விசாரிக்கப்பட்டு வருகின்றன. இதில் 20, தமிழ்நாட்டு ஐ.ஏ.எஸ்.காரர்கள் மீது! 60 புகார்கள் ஐ.பி.எஸ். அதிகாரிகள் மீது விசாரணையில் இருக்கின்றன. இதில் 52, பீகார் மாநில ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மீது!

● முன்னாள் பிரதமர் நரசிம்மராவின் தனிச் செயலர் ஏ.என்.வர்மா யூரியா ஊழல் விஷயமாகப் பலருக்கு போன் செய்த மாதிரி, முன்னாள் பத்திரிகை - மக்கள் தொடர்புச் செயலர் பி.வி.ஆர்.கே. பிரசாதும் செய்திருப்பாரோ என்று சி.பி.ஐ. சந்தேகிக்கிறது. ஆனால் மே மாதமே இரண்டு மாத விடுப்பில் வெளிநாடு சென்ற பிரசாத், இப்போது எங்கே இருக்கிறார் என்று தெரியவில்லை. வந்தால் அவரையும் குடைய வேண்டும் என்று காத்திருக்கிறது சி.பி.ஐ.

● சான்ஸ் கிடைத்தால் போதும், உ.பி. கவர்னர் ரொமேஷ் பண்டாரி தில்லிக்கு வந்து விடுகிறார். பிரதமர், உள்துறை அமைச்சர் எல்லாருக்கும் ஒரு ஹலோ சொல்லிவிட்டுத் தமது மகாராணி பாக் மனைக்குப் போய் விடுகிறார். அங்கேதான் முக்கியமானவர்களை எல்லாம் சந்திக்கிறார். டிரான்ஸ்ஃபர்கள், டிரான்ஸ்ஃபர் கேஸ்களில் மாற்றங்கள் எல்லாம் இங்கேதான் தீர்மானிக்கப்படுகின்றன!

• தேவகௌடா



● சிறைக்குள்ளேயே யாகமும் ரக்ஷாபந்தன் விழாவும் நடத்த அனுமதி கோரியிருக்கிறார் சந்திராசுவாமி. தலைமை மெட்ரோ ...ாலிடன் மாஜிஸ்திரேட் யோசிப்பதாகச் சொல்லியிருக்கிறார். சொன்னவர், ''ஏன் உமது நிலைமை இப்படி ஆகிவிட்டது?'' என்று சந்திராசுவாமியிடம் விசாரித்தார். "கிரகங்கள் எனக்குச் சாதகமான நிலையில் இல்லை. அத்தோடு, நான் முன்பு செய்தவற்றின் பலனையும் அனுபவிக்க வேண்டியிருக்கிறது!'' என்றார் சந்திராசுவாமி.

● சுதந்தர நாள் உரையில் ஆங்கிலமும் கன்னடமும் கலந்து ஹிந்தி பேசலாம், தவறில்லை என்று பலர் தேவேகௌடாவிடம் சொன்னார்கள். பிரதமர் கேட்கவில்லை. தமது இந்தி ஆசிரியர் பிரிஜ் மோகன் மிஸ்ராவிடம் ஆறு வாரங்கள் மிகக் கடுமையான ஹிந்தி பயிற்சி பெற்றாராம்.

● முரசொலி மாறன், தமது அறையில் இருந்த மகாத்மா காந்தியின் படத்தைக் கழற்றி வெளியேற்றி விட்டார். போக்குவரத்து அமைச்சர் டி.ஜி. வெங்கட்ராமனோ, பெரிய சைஸ் கலைஞர் போட்டோ ஒன்றைத் தமது அறையில் மாட்டி வைத்திருக்கிறார்!

— நியூஸ்வாலா

# ஓவியம்



**சா**ருலதாவிடம் எந்த மாற்றமும் இல்லை. முன்னைவிட இன்னமும் வெளுப்பாய், அழகாய்த் தெரிந்தாள்.

ஹாலில் சோபாவில் உட்கார்ந் திருந்தவளை முதலில் 'யாரோ' என்று நினைத்தான்.

''யாருங்க அது...'' என்றாள் அவனுடன் ஒட்டிக் கொண்டு படியிறங்கிய உமாவும்.

அப்பாவுடன் பேசிக் கொண் டிருந்தவள் திரும்பிப் பார்த்துப் புன்னகைத்தாள்.

''ஹாய்...''

இயல்பான புன்னகை. அவனுக் குத்தான் வினாடி நேர படபடப்பு. சமாளித்துக் கொண்டு சிரித்தான்.

உமாவுக்கும் புரிந்துவிட்டது. ஓ...இவளா....அந்த நிமிடம் நிச்சயமாய் அவள் மனதில் நிறைய கேள்விகள் எழுந் திருக்கும்.

சாருலதாவிடம் சொல்லிக் கொண்டு போவதா, வேண்டாமா என்ற குழப்பமே இல்லை. அவளைப் போலவே தானும் சுதந்தர புருஷன்.

''வா...உமா....'' என்றான்.

வெளியே போனதும் உமா விசாரித்தாள்.

''இவதானே உங்க ஃபர்ஸ்ட் வொய்ப்...''

தலையசைத்தான். இவளுடன் திரு மணம் நிச்சயமான மறுதினமே பர்சன லாய் சந்தித்துப் பேசி விட்டான்.

'எனக்கு ஏற்கெனவே திருமணமாகி விட்டது. நான் இப்போது விவாக ரத்தானவன். வேறு உபத்திரவங்கள்

இல்லை. இந்த விவரங்கள் உங்கள் குடும்பத்துக்கு முன்பே தெரியும். இருந்தாலும் நீ நேரடியாய் என்னை எதுவும் கேட்க விரும்பலாம். அதனால்தான் இந்த சந்திப்பு...'

உமா எதுவும் கேட்கவில்லை. அதாவது முதல் திருமணம் பற்றி. நிறைய முன்கூட்டியே தெரிந்து வைத்திருக்க வேண்டும்.

இவனுடைய மற்ற செயல்கள் பற்றிக் கேட்டாள். விடைபெறும்போது மட்டும் சாருலதா பற்றி ஒரு கேள்வி.

'அவங்க ஆர்ட்டிஸ்ட்டாமே... பெயிண்டிங்ல ஆர்வம்னு.... கேள்விப்பட்டேன்....'

'ஆமா.. எக்சிபிஷன்லாம் நடத்தியிருக்கா...'

'ஓ...நம்ம வீட்டுல ஏதாவது அவங்க வரைஞ்சது இருக்கா?'

யோசித்துத் தலையாட்டினான் மறுப்பாக.

'ஸெபரேஷன்போது எடுத்துக்கிட்டுப் போயிட்டா.'

'ஸீ....யூ...'

தான் நினைத்ததைவிட உமா முற்போக்கானவள் என்று புரிந்தது. இந்தத் திருமணமாவது தான் தேடிய ஆதர்ச வாழ்க்கை தரக்கூடும் என்று எதிர்பார்த்தது அப்போதுதான்.



உமா, சாருலதாவின் அருகிலேயே அமர்ந்து விட்டாள்.

அப்பாவின் முகத்தில்கூட புன்னகைக் கீற்று. புது மருமகளும், பழைய மருமகளும் நல்ல ஒப்புமை.

''இன்னிக்கு நாங்க வெளியே சாப்பாடு... வந்து.... உங்களுக்கு ஏதாவது....' என்றாள் உமா லேசாய் திக்கிய குரலில்.

''ஆச்சு...'' என்றாள் சாரு முறுவலுடன்.

அப்பா பேசினார்.

''நானும் இன்னிக்கு என்னோட விரதத்தை மாத்திக்கிட்டேன். ரெண்டு ஸ்லைஸ் ப்ரெட்... சாப்பிட்டேன்... அவ டோஸ்ட் பண்ணிண்டா...''

''ஃப்ரிட்ஜ்ல பால் இருந்துதே....''

''ம்... ரெண்டு பேரும் ஆளுக்கு ஒரு டம்ளர்... சூடான பால்....''

இது சாருலதா.

ஏதோ வெளியுறவு மந்திரியுடனான பேச்சு வார்த்தை போல தடம் பிறழாத வார்த்தைகள்.

''இப்ப எதுவும் எக்சி

**எ**ட்டு மணிக்கு வீடு திரும்பியபோது சாருலதா இருந்தாள். இந்தமுறை வேறு வழியில்லை, நின்று ஒரிரு வார்த்தைகளாவது பேசாமல் போனால் 'பயந்து ஓடுகிறான்' என்ற பெயர் வரக் கூடும்.

'எனக்கு ஒன்றும் பாதிப்பு இல்லை' என்கிற தோரணையில் கால் மீது கால் வைத்து நெஞ்சு நிமிர்த்தி அமர்ந்தான்.

ரிஷபன்



"வேலூர் ஜெயிலில்
இருக்கும் கட்சித் தலைவர்
அவர்களே! கடலூர்
ஜெயிலில் இருக்கும்
பொருளாளர் அவர்களே!
சென்னை ஜெயிலில்
இருக்கும் கட்சிக் கொறடா
அவர்களே......!"
-ப்ரியதர்சினி

பிஷன் வைக்கப் போறீங்களா..." என்றாள் உமா.

"என்னை 'நீ'ன்னே கூப்பிடலாம்...உமா..."

சாரு இன்னமும் மாறவில்லை.

"என்ன கேட்டே... எக்சிபிஷனா...ப்ச்... வைக்கணும். ஆனா... எனக்கே இன்னும் ஒரு திருப்தி வரலே... என்னோட கலெக்ஷன்ல..."

"இங்கே நீங்க...ஸ்ஸ்... நீ வரைஞ்சது ஏதாவது இருக்கும்னு எதிர்பார்த்தேன்... எதுவும் இல்லே..." என்றாள் உமா.

"அப்பா...ஹால்ல ஒண்ணு இருந்ததே.... அதோ...அந்தக் கார்னர்ல...."

சாருலதா.... 'அப்பா' என்றுதான் முன்பும் அழைப்பாள். பிரிவின்போதும் பிரியாத பந்தம் என்று இருவரும் கைகுலுக்கிக் கொண்டார்கள்.

சிண்டியிருந்தான் முன்பே.

"ஆஃப்டர் ஆல்... நீ என்னோடு வாழ வந்தவ... இப்ப அது முறிஞ்சு போச்சு.... அது என்ன... என்னோட அப்பா... உனக்கும் அப்பா...."

'நல்ல சிநேகிதம் எப்பவும் பட்டுப் போகாது...' என்றாள் பளிச்சென்று.

உறவுமுறைகளைவிட நட்பு போலப் பழகுவதில்தான் அவளுக்கு அதிக ஈடுபாடு. அதில்தான் தனி மனித சுதந்திரமும் இருக்கும். விட்டுக் கொடுத்தலும் இயல்பாய் வரும் என்பாள்.

"என் ரூம்ல இப்ப இருக்கு" என்றார் அப்பா, விட்டுப் போன பேச்சின் தொடர்ச்சியாக.

"நான் பார்க்கணும்..." என்றாள் உமா.

அவளுக்கு 'மாமா' என்றும் வரவில்லை. 'அப்பா' என்றும் கூப்பிட மனசில்லை. மையமாய் பேச்சுக்கள்.

"லேட்டாயிருச்சே... இங்கேயே தங்கிடலாம்" என்றாள் உமா.

இவனைச் சுத்தமாய் உதாசினப்படுத்திய சம்பாஷணை... அல்லது இவனால்தான் இயல்பாக ஒட்ட முடியவில்லையா... மனசுக்குள் நமைச்சல்.

"இல்லை... போகணும்... ரூம் போட்டிருக்கேன் போயிரலாம்... ஆட்டோதான் இருக்கே...."

அப்பா குறுக்கிடவில்லை. வற்புறுத்தி இருந்தால் தங்கி விடுவாளோ என்னவோ, அப்பாவும் அவளும் நன்றாகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும்.

'எனக்கு மட்டும் ஏன் சாத்தியமின்றிப் போனது...' என்று நினைத்தான்.

உமா அவன் தோளில் தட்டினாள்.

"கொஞ்சம் உள்ளே வாங்க..."

சமையலறைக்குள் போனதும் கேட்டாள்.

"ஆமா... நீங்க ஏன் பிரிஞ்சீங்க..."

இதுவரை கேட்டிராத கேள்வி. உமாவை வெறித்தான். 'இருவரும் மனசொப்பி விவாகரத்து கேட்பதால்...' கலபமாய் எந்தவித நிபந்தனைகளுமின்றிப் பிரிதல்.

வெளியே வந்து விட்டான். சாருலதா தான் கையோடு கொண்டு வந்திருந்த பிரீப்கேஸிலிருந்து எதையோ வெளியே எடுத்தாள்.

"உமா... இங்கே வாயேன்..."

சுருட்டிய கெட்டியான காகிதம், பட்டு நூல் முடிச்சு.

"ஸ்மால் ப்ரசெண்ட் ஃபார் யூ..." என்றாள் சாருலதா.

உமா ஆர்வமாய்ப் பிரித்தாள். பார்டர் எதுவுமற்று வரையப்பட்ட படம்.

ஒரு பெண்ணின் படம் என்று யூகிக்க முடிந்தது. முகம் ஒழுங்கற்று.... கண்கள், மூக்கு, உதடு எல்லாம் விட்டேத்தியாய்... ஆனால் படத்தில் பெண்ணின் மார்பகங்கள் மட்டும் துல்லியமாய்... மிகப் பெரிதாய்.... அவ்வளவு தான், முகமும் மார்பும்தான்.

"புரியலை..." என்றாள் உமா உடனே.

"யோசி... புரியும்..."

அப்பா எட்டிப் பார்த்து லேசாய் அதிர்ந்த மாதிரித் தெரிந்தார்.

"ஏம்மா... இவ்வளவு கோபமா... உனக்குள்..." என்றார்.

அவருக்குப் புரிந்து விட்டது போலும்.

சாருலதா 'குட்நைட்' சொல்லி வெளியே போனாள். அப்பாவும்.

அவனும் ஓவியத்தை வாங்கிப் பார்த்தான்.

'ஒரு பொண்ணுகிட்ட வேற என்ன எதிர்பார்க்கப் போறேன்...' எப்போதோ சாருலதாவிடம் சொன்ன வாசகம் நினைவில் வந்து பளீரென்று அறைந்தது.

# நவராத்திரியை முன்னிட்டு
# எங்கள் விசேஷ சேமிப்பு திட்டம்

# சில்வர் டெபாசிட் திட்டம்



டெபாசிட்டுகள் வரவேற்கப் படுகின்றன

## EXPRESS
FINANCIAL EXCHANGE LIMITED

**பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்**

• வாகனங்களுக்கான கடன்கள் • பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் **அமெரிக்கன் எக்ஸ்பிரஸ்** டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்வேல் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4-ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியாகிறது.

Helios & Mathison

"இந்தப் பாலும் டிகாக்ஷனும் ஒண்ணுக்காக ஒண்ணு பிறந்த மாதிரி என்ன ருசி..."

வசந்தி கொடுத்த காப்பியைத் துளித் துளியாக ருசித்துக் கொண்டிருந்தாள் சுகன்யா. சூடான காப்பி தம்ளர் அவள் உதட்டில் அழுந்தியபோது, அது மேலும் சிவந்து போனது.

பார்த்துக் கொண்டிருந்த வசந்தி, பொங்கி வந்த சிடுசிடுப்பை அடக்க எந்த முயற்சியும் செய்யவில்லை.

"இதப் பாருங்க... இப்படி உதட்லே படற மாதிரி எச்சில் பண்ணிக் குடிச்சா அம்மாவுக்குப் பிடிக்காது...."

"ஓ! ஸாரி வசந்தி... நீ அதை முன்னாடியே சொல்லியிருக்கலாமே..."

"ஏண்டி! உனக்கெங்க போச்சு புத்தி...? பீங்கான் கப்புல விட்டுக் கொடுக்க வேண்டியதுதானே..." - சரஸ்வதி சமையலறையிலிருந்தபடியே கத்தினாள்.

"இல்லைம்மா... நானே கழுவி வைச்சுடறேன்" என்று சுகன்யா தம்ளருடன் சமையலறை குழாயடிக்கு விரைந்த போது -

"ஐய்யோ!" என்று வசந்தியும் சரஸ்வதியும் ஏக காலத்தில் எழுப்பிய கூச்சல் அவளை ஸ்தம்பித்து நிற்கச் செய்தது.

"இதப்பாரு...! எச்சில் பாத்திரத்தையெல்லாம் இங்க சமையல்கட்டுல அலம்பக் கூடாது. வெளிக் குழாயில அலம்பிக் கொண்டு வரணும்...."

"ஆங்...?"

"ஏய் வசந்தி! அவ கை பாத்திரத்தை வாங்கி அலம்பேண்டி..."

வெடுக்கென்று தம்ளர் செட் கையிலிருந்து பிடுங்கப்பட்டது. விறுவிறுவென்று கொல்லைப் புறத்துக்குப் போன வசந்தி, வேப்பமர நிழலிலிருந்த குழாயடியில் அதைக் கழுவி எடுத்து வந்தாள். சமையலறைக் குழாயடியில் மீண்டும் ஒருமுறை கழுவித் துடைத்த பிறகே, அந்த தம்ளர் அதனிடத்தில் வைக்கப்பட்டதைக் கவனித்து, மனத்தில் குறித்துக் கொண்டாள் சுகன்யா.

"நான் ஏதாவது உதவி செய்யட்டுமா?" மாமியாரை அணுகிக் கேட்டபோது இயல்புக்கு மாறான தயக்கமும் தடுமாற்றமும் விலங்கிட்டன.

"எல்லாம் முடிஞ்சு போச்சு... சுவாமி நமஸ்காரம் பண்ற வழக்கமுண்டா?"

பிரமித்தாள் சுகன்யா. கடந்த இரண்டு வருட ஹாஸ்டல் வாழ்க்கையில் பூஜையறை என்பதாக ஒன்றைப் பார்க்கவேயில்லை. கல்... அலுவலகக் கடமைகளும் ஹாஸ்டல் கட்டுப்பாடுகளும் தான் கடவுள்! அவற்றைச் சமாளிக்கும் முனைப்பில், அப்பா விதைத்திருந்த கொஞ்சநஞ்சம் பக்தியும் முடங்கி ஓரங்கட்டப்பட்டுக் கிடந்தது. அம்மாவுக்கோ கடவுள் நம்பிக்கை அறவே கிடையாது... 'இந்த நிஜங்களைச் சொன்னால் இந்த வீடு தாங்குமா...?'

# உள்ளே வரலாமா?

## 6

**ம.வே. சிவகுமார்**

அவள் குழம்பிப்போய் யோசிக்கையிலேயே கணகணவென்று மணி அடித்தது. ஏதோ ராணுவ உத்தரவுக்குக் கட்டுப்பட்டது போல் வீட்டின் அத்தனை பேரும் பூஜையறை நோக்கிப் போனார்கள்.

'தானும் போக வேண்டுமோ....?'

அப்போது தான் குளியலறையிலிருந்து வெளிப்பட்ட ஸ்ரீராம் இன்னமும் ஈரம் உலராத கையினால் அவள் தோளைத் தொட்டு அழைத்தான்.

"வா...."

விஸ்தாரமான அறைதான் என்றாலும் பெரியத்தையையும் சித்தியையும் சேர்த்து எட்டுப் பேர் நின்ற போது நிரம்பிப் போனது. ஸ்ரீராமின் அருகே ஒடுங்கி நின்று பார்த்தாள் சுகன்யா. சுவர் நிறைத்துப் படங்கள். அவற்றில் ஒரே அளவாய்க் கத்திரித்து வைத்த மூன்று இன்ச் மல்லிகைச்சரம். சுவரையொட்டி தரையில், மையத்தில் மிகப் பெரிய தஞ்சாவூர் ஓவியம், ராமர் பட்டாபிஷேகக் காட்சி. அதனருகே சிறியதும் பெரியதுமாய்ப் பளபளத்த விக்கிரகங்கள்.



ராமநாதன் கற்பூர ஜோதியைப் படங்களுக்குக் காட்டியபடியே மணியடித்துக் கொண்டிருந்தார்.

குடும்பமே கண்மூடி நின்று பிரார்த்திப்பதைப் பார்த்த சுகன்யா, தானும் கண்களை மூடிக் கொண்டாள்.

மணியோசை நின்று கண் திறந்த போது, பிரம்புக் கூடையிலிருந்த உதிரிப் பூக்களை ராமநாதன் எல்லோருக்கும் நீட்டிக் கொண்டிருந்தார்.

சுகன்யாவினருகே வந்தவர், சற்றே தயங்கி விட்டு, சட்டென்று ஸ்ரீராமிடம் தட்டை நீட்ட, அவன் விரல் குவித்துப் புஷ்பங்களை மிருதுவாக எடுத்து சுகன்யாவின் கையில் தந்துவிட்டு, தனக்கென்று சில பூக்களை மீண்டும் எடுத்துக் கொண்டான்.

ஒவ்வொருவராய் பூக்களைத் தூவி நமஸ்கரித்துவிட்டுப் போக, ஸ்ரீராமும் சுகன்யாவும் அந்த அறையில் தனித்து நின்றார்கள். கண்களை மூடி நின்ற கணவனின் முகத்தைப் பார்த்தாள். அதில் ஒளிர்ந்த ஆழ்ந்த நம்பிக்கை பரவசமூட்டியது. அழகுணர்ச்சியுடன் அலங்கரித்த சுவாமி படங்களும், தரையில் நெளிந்த மாக்கோலங்களும் ராமர் படத்தின் பழமை மெருகுமாக சாந்நித்யம் பெற்ற அந்த பூஜை அறையின் மையத்தில் அவனைப் பார்க்கப் பார்க்க மனம் நிறைந்தது.

கண் திறந்தவன், கையிலிருந்த பூக்களை ஒரு நாட்டிய நளினத்துடன் ராமர் படத்தின் மேல் தூவினான். அவனைப் பின்பற்றித் தானும் தூவிவிட்டு, இணைந்து நமஸ்கரித்து எழுந்தாள்.

"அப்பா..." இன்னமும் அங்கிருந்து அகலாமலே அழைத்தான் ஸ்ரீராம்.

'என்ன...?' என்பது போல் வெளியிலிருந்தபடியே பார்த்தார் ராமநாதன்.

"அம்மாவோட வந்து நில்லுங்கோ... நமஸ்காரம் பண்றோம்..."

# தங்க நகை பரிசு!

இன்னும் 20 வாரங்கள் வெளிவரப்'போகிற இந்தத் தொடர் கதை, வாராவாரம் ஓர் எழுத்தாளரின் பெயரில் வெளியாகும். ஆனால் முழுக் கதையையும் எழுதுபவர் ஒரே எழுத் தாளர்தான்! யார் அவர்?

வாரா வாரம் படித்து, யூகித்துக் கொண்டே இருங்கள். கடைசி வார அத்தியாயத்துடன் வெளியாகப் போகிற கூப்பனில், 'தொடரை எழுதியவர் யார்?' என்கிற உங்கள் யூகத்தை எழுதி அனுப்புங்கள்.

உங்கள் யூகம் சரியானதாக இருந்தால் உங்களுக்குத்தான் மின்னும் தங்க நகைப் பரிசு!

பலர் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கல் முறையில் ஓர் அதிர்ஷ்ட சாலி தேர்ந்தெடுக்கப்படு வார். ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

சுவாமி படங்களருகே அவர்கள் வந்து நிற்க, சுகன்யாவும் ஸ்ரீராமும் நமஸ்கரித்து எழுந்த போது, பிள்ளையின் கன்னத்தை வழித்து திருஷ்டி கழித்தாள் சரஸ்வதி. ராம நாதனின் கண்கள் கலங்கிவிட்டன. மகனின் தோள்களில் கை வைத்து ஓர் அழுத்து அழுத்தி உணர்ச்சிகளை விழுங்கிக் கொண்டார்.

அந்தச் சில அன்னியோன்ய கணங்களே, தன்னை மட்டும் அன்னியப்படுத்தி விலக்கு வதை உணர்ந்தாள் சுகன்யா.

தரையில் கால் மடித்து உட்காருவதே கஷ்ட மாயிருந்தது. வாழை இலையில் ஊற்றிய ரசம், வரம்புகட்டிய சாதத்தைத் தாண்டி தரை நோக்கி ஓட,

''சாரி சார்! பகவத் கீதை, இராமாயணம் புத்தகமெல்லாம் அவுட் ஆப் ஸ்டாக்! ஜெயில்லே இருக்கிறவங்களுக்கே சப்ளை பண்ணி மாளலே!

— மல்லிகைமன்னன்

இடது கையில் இலை முனையைத் தூக்கிப் பிடித்துச் சாப்பிட முயன்றாள் சுகன்யா.

"ஏண்டி சச்சு! இப்படி இடக்கையும் வலக் கையுமா கஷ்டப்படறாளே மாட்டுப் பொண்ணு... பேசாம மேஜையிலேயே உட்கார வைச்சுப் பொண்ணு மாப்பிள்ளைக்குச் சாதம் போட்டிருக்கலாமோல்லியோ....?"

பெரியத்தையின் பேச்சைக் கேட்டு சுகன்யா இடக்கரத்தை இலையிலிருந்து எடுக்க, ரசம் புதுப்புடைவையை நோக்கி வேகமாக வந்து இலேசாக நனைத்தது.

"நானும் இப்படிச் சாப்பிடக் கத்துக்கணும் தானே...?" என்றாள் சுகன்யா.

"நன்னா கத்துக்கோடியம்மா... சச்சு தின மும் கீழேயே உட்கார வைச்சு, இலையிலேயே சாதம் போடுடி...."

"இது இடக்கான பேச்சா இல்லையா...?" என்று சுகன்யா யோசித்துக் கொண்டிருந்த போதே மற்றவர்கள் சாப்பிட்டு முடித்து எழத் தயாராகிவிட்டார்கள்.

அவசரமாய் உண்டு முடித்து, கை அலம்பித் திரும்புவதற்குள், சாப்பிட்ட இலைகளை வசந்தி அகற்றிவிட்டிருந்தாள்.

ஏதேனும் உதவி செய்ய வேண்டும் என்ற வேகத்துடன் கூடத்தைக் கடந்து சமையலறை நோக்கி விரைந்தாள், சுகன்யா.

"ஐய்ய்ய...! நில்லு நில்லு! எச்சில்" என்று சரஸ்வதி அலறிய அலறல், அடித்த சிலையாக அவளை நிறுத்தியது.

"எங்கே எச்சில்? கீழே சுத்தமாகத்தானே இருக்கு...?"

"சுத்தமாயிருந்தா என்ன...? சாப்பிட்ட இடம்னா எச்சில்தான். அதைத் துடைச்சு முடிக்கற வரைக்கும் மிதிக்கக் கூடாது...? போ, கொல்லையில போய்க் கால அலம்பு...."

சுத்தமான கால்களை ஏன் அலம்ப வேண் டும் என்று புரியாமல் சுகன்யா கொல்லைப் புறக் குழாயடிக்குப் போக, அங்கும் சரஸ்வதி யின் குரல் நன்றாகவே கேட்டது.

"ஈச்வரா! இவளுக்கு என்னத்தைச் சொல்லிக் கொடுத்து நான் எப்ப கரையேறப் போறேன்....!"

வார்த்தைகள் சரியாகப் புரியா விட்டாலும் தொனியின் வேதனை புரிந்தது சுகன்யா வுக்கு.

"சுகி... அப்பாவுக்கு பிராட்வே வரைக்கும் போக ணுமாம் அழைச்சுட்டுப் போய்ட்டு வரேன்..." என்று ஸ்ரீராம் விடைபெற்ற போது கொஞ்சம் பயமாகக் கூட இருந் தது.

"சீக்கிரம் வந்துடுவீங்க இல்ல...?"

மின்னுவதெல்லாம் பொன்னல்ல

# பொன்னான வாழ்வுக்கு வெஞ்ச்சுராவை நாடுங்கள்!



**வெ**ன்ச்சுராவின் பொன்னான தங்கத் தொட்டில் திட்டம் உங்கள் குழந்தையின் வாழ்க்கையை வளமாக்குகிறது; தக தகவென மின்னச் செய்கிறது.

இந்த திட்டத்தில் நீங்கள் செலுத்தும் குறைந்த முதலீட்டிற்கு பன்மடங்கு பலன் கிடைக்கிறது. நிறைந்த வருவாய்; நீடித்த பயன்.

ஆம். உங்கள் குழந்தைக்காக வென்ச்சுராவுடன் நீங்கள் ஏற்படுத்திக் கொள்ளும் உறவு ஒரு ஆயுட் காலப் பிணைப்பு.

தரையில் தவழ்ந்து கொண்டிருக்கும் உங்கள் சின்னஞ்சிறுசுகள் எங்களுடைய தங்கத் தொட்டிலில் தவழட்டும்: அவர்களுடைய எதிர்காலம் தழைத்தோங்கட்டும்.

| | | |
|---|---|---|
| முதலீடு | திட்டம் A | ரூ. 6,850 |
| | திட்டம் B | ரூ. 600 x 12 மாதங்கள் |
| | திட்டம் C | ரூ. 300 x 24 மாதங்கள் |
| வருவாய் | ஒவ்வொரு ஆண்டும் ரூ.2,500 வீதம் 20-வருடங்களுக்கு சீரான வருமானம் (ரூ.50,000)!<br><br>மேலும், 20-வருடங்கள் கழித்து, உங்கள் மகன்/ மகள் ரூ.5 லட்சம் ரொக்கமோ, அல்லது அதற்கு ஈடான தேக்கு மரங்களையோ பெறுதல்!! | |
| போனஸ் | அதுமட்டுமின்றி 'கோல்ட் பொனான்ஸா' ஒன்றில் நீங்கள் பங்கு பெற வாய்ப்பு!! | |




ORCHARDS & FARMLANDS

63, Eldams Road, II Floor, Teynampet, Madras - 18. Ph: 453024

இலேசான மருட்சியுடன் கேட்டவளைக் கனிவுடன் பார்த்துச் சொன்னான்."

"பயப்படாதே. யூ வில் பி ஆல்ரைட்."

"ஓகே...."

"ஏம்மா, களைப்பாயிருந்தா சித்த நேரம் படுத்துத் தூங்கு..." என்ற அனுமதி உத்தரவாகப் பிறப்பிக்கப்பட, சுகன்யா 'அப்பாடி' என்று படுக்கையில் போய் விழுந்தாள். புடைவை உடுத்தித் தூங்குவது ஏக உபத்திரவமாய் இருந்தது. உடைமாற்றினால் எழக்கூடிய விமர்சனங்களுக்குப் பயந்து அப்படியே கசகசப்பில் தூங்கினாள்.

எழுந்தபோது மணி மூன்றை நெருங்கிக் கொண்டிருந்தது. ஸ்ரீராம் இன்னமும் வந்திருக்கவில்லை.

கூடத்துத் தரையில் வசந்தி நித்யமல்லி அரும்புகளைத் தொடுத்துக் கொண்டிருந்தாள். லாகவத்துடன் பறந்த அவள் விரல்களைச் சற்று நேரம் பார்த்தாள் சுகன்யா. ஏற்கெனவே தொடுத்து முடித்த இரண்டு முழச் சரம், வசந்தியின் இடது கையிலிருந்து தொங்கியது. அதைத் தொட்டுப் பார்க்கக் கை நீட்ட.....




"தொடாதீங்க!"

அடிப்பட்டவளாய் நிமிர்ந்தாள் சுகன்யா.

"சுவாமிக்குப் போடணும் இந்தப் பூவை."

"சுவாமிக்குப் போடணும்னா நான் தொடக் கூடாதா?"

இடறலான மௌன இடைவெளிக்குப் பின், வசந்தி சங்கடமாய்க் குரல் தாழ்த்திப் பதில் சொன்னாள்.

"பெட்லே படுத்துத் தூங்கியிருக்கீங்க இல்ல... அதனால் உங்களுக்கு மடி போதாது."

"பெட்லே படுத்துக்கக் கூடாதா?"

"படுத்தா குளிக்கணும், குளிச்சுட்டுத்தான் சுவாமி காரியம் பண்ணலாம். அதனால்தான் அம்மா பகல்ல பலகைக் கட்டையைத் தலைக்கு வச்சுண்டு தூங்குவா."

"ஓ... ஏன்? படுக்கையில் படுத்தா என்ன தப்பு... ஏன் குளிக்....?"

கேள்வியை முடிப்பதற்கு முன் வசந்தி முகம் சிவப்பதைப் பார்த்து, பதிலைப் புரிந்து கொண்ட சுகன்யா பேச்சை மாற்றினாள்.

"வசந்தி... எனக்குப் பூ கட்ட சொல்லித் தறியா?"

"ம்... முதல்ல காகிதப் பூ கட்டிப் பழகிக்கிட்டேன் நான்... அந்த மாதிரி நீங்களும் பழகிக்குங்க..."

"அப்புறம் வசந்தி... இந்த வீட்டுல அதாவது நம்ம வீட்லே நிறைய ரூல்ஸெல்லாம் இருக்கு இல்ல..."

"ஊம்..."

"எனக்கு ஒண்ணுமே புரியலை. எதுவும் தெரியலை.... அதனால...."

"ஊம்..."

"அதனாலே, நீ எனக்கு ஒரு உதவி பண்ணணும் ஒரு நோட்டுக் தறேன். அதுல Do's and dont'sன்னு பிரிச்சு எல்லாத்தையும் எழுதிக் குடுத்துடறியா?"

வசந்தி, கையால் வாயைப் பொத்திக் கொண்டு சிரிக்க ஆரம்பித்தாள். அவள் சிரிப்புச் சப்தத்தைக் கேட்டு வந்த சரஸ்வதிக்குக் கோபம் வெடித்தது.

"ஏண்டி! சுவாமி பூ தொடுக்கறச்சே வாய்கிட்ட கை போறது... போய்க் கையை அலம்பு..."

"ஐயோ! நான் எச்சில் பண்ணலைம்மா.. இந்த மன்னி... மன்னி வந்து.. நம்ம ஆத்து ரூல்ஸெல்லாம் ஒரு நோட்டுல எழுதித் தரணும்னு கேட்கறாம்மா?"

"அதெல்லாம் நோட்டுல எழுதி வைச்சு நெட்டுரு பண்ணி வராதுன்னு சொல்லு உங்க மன்னிகிட்டே... உடம்போட பிறந்து வளரணும்..."

முகத்திலறைந்த பதில்தான். அதிலும் ஒரு சின்ன ஒளிக்கீற்றைக் கண்டுபிடித்து மகிழ்ந்தாள் சுகன்யா. கல்யாணமாகி வந்த இந்த இருபத்துநாலு மணி நேரத்தில், வசந்தி தன்னை முதல் முறையாக 'மன்னி' என்று கூப்பிட்டிருக்கிறாள்; வசந்தியின் அம்மாவும் அந்த உறவை அங்கீகரித்திருக்கிறாள்.

(தொடரும்)

# சபரி
# சூப்பர் இங்கிலீஷ் கோர்ஸ்




இப்பொழுது
**மாபெரும்**
**சலுகை விலையில்**

## ரூ. 126 மட்டுமே
(ஒரு நிலை)

## ஆடியோ கேசட்
## இலவசம்

**இச்சலுகை செப்டம்பர் 21 வரை மட்டுமே.**

எல்லா புத்தகக்கடைகளிலும் கிடைக்கிறது
**'சபரி'** என்று கேட்டு வாங்குங்கள்



**SABHARI**
Education Private Limited




Corporate Office: 1 Velders Street (Near LIC) Mount Road, Madras - 600 002

**நேர்முகப் பயிற்சி மையங்கள்:**

சென்னை : மவுண்ட் ரோடு : Ph :849069/840733, அடையார் : Ph : 4917396 அண்ணாநகர் : Ph : 429643 அம்பத்தூர் : Ph : 6350719 கோடம்பாக்கம் : Ph : 4842647 தாம்பரம் மேற்கு : Ph : 2366747 கோயம்புத்தூர் : Ph : 234450 திருநெல்வேலி : Ph : 24833.

EFFICIENT





# நீங்கள் வீடு கட்டுவதற்கான கடன் வசதி பெற எவ்வளவு காலம் பொறுத்திருப்பீர்கள்?

**(7 நாட்கள் முடியுமா?)**

இப்பொழுது நீங்கள் அலைந்து, திரிந்து வீடு கட்டும் கடன் வசதி பெறத் தேவையில்லை. எங்கள் அலுவலகத்திற்கு வந்ததிலிருந்து, துரிதகதியில் உங்கள் விண்ணப்பத்தை பரிசீலனை செய்து ஏழே நாட்களில் கடனுதவி சாங்ஷன் செய்யப்படும். அது மட்டுமல்லாமல், கடன் பெறும் வீடு மற்றும் நிலத்திற்கான சட்ட ஆலோசனைகளும் வழங்கப்படும்.




வீட்டு விரிவாக்கம், ரிப்பேர் மற்றும் புதுபிக்க ரூ.2 லட்சம் வரை கடனுதவி வழங்கப்படும்.

*Home is where your heart is.*




**HAPPY HOME PROFIN LTD.**

**HOUSING FINANCE MADE EASY**

**DEPOSITS ALSO ACCEPTED**

*Corp. Office:* Vasanth Apartments, Suite A1, 75 Sir. C.P. Ramaswamy Road, Abhiramapuram, Madras 600 018. **Ph: 4970176, 4970175, 4994005. Fax: 4997297.**

*Bangalore :* # 337, Karuna Complex, G-5, Ground Floor, Sampige Road, Malleswaram, Bangalore - 560 011. **PH: 366519.**

*Coimbatore:* Gowtham Centre, Ground Floor, # 1055, Avinashi Road, Coimbatore - 641 018. **Ph: 200793.**

L'Gateway

# கூட்டணியோ கூட்டணி!

**தா**ய்லாந்து அரசியல் ஒரு புரியாத புதிர். அந்த நாட்டில் இந்த ஆண்டு முழுவதும் திருவிழாதான். மன்னர் பூமிபால் அதுல்யதேஜ் அரியணை ஏறி ஐம்பதாண்டுகள் ஆகின்றன. பொன்விழா கொண்டாட்டங்கள். ஆனால் தாய்லாந்து அரசியலில் கொண்டாடும்படி ஒன்றுமில்லை. பெயருக்குப் பார்த்தால் களத்தில் இரண்டே இரண்டு கட்சிகள்தான். ஜனநாயகக் கட்சி. சார்ட்தாய் கட்சி. கொஞ்சம் உள்ளே புகுந்தால் ஒவ்வொன்றுக்குள்ளும் நிறைய கூட்டணிக் கட்சிகள். (அவற்றின் பெயர்களைத் தப்பில்லாமல் உச்சரிக்க சிரமப்படுவீர்கள் - எச்சரிக்கை!)

391 உறுப்பினர்கள் கொண்ட பாராளுமன்றம். தற்போதைய பிரதமர் பன்ஹார்ன் ஸில்பா ஆர்ச்சா. சார்ட்தாய் கட்சியின் தலைவர். சென்ற ஜூலையில் நடைபெற்ற தேர்தலில் 91 இடங்களில் இவர் கட்சிக்கு வெற்றி. ஆறு கட்சிகளைச் சேர்த்துக் கொண்டு கூட்டணி ஆட்சி அமைத்தார். அப்புறம் இன்னொன்றையும் சேர்த்துக் கொண்டார். 91 வளர்ந்து 232 ஆனது.


தாய்லாந்து பிரதமர் ஸில்பா ஆர்ச்சா

தாய்லாந்தில் கட்சிகள் கூட்டணி சேருவது கொள்கை, மக்கள் சேவை என்கிற மாதிரியான எந்த அடிப்படையிலும் எப்போதும் இருந்ததில்லை. மூன்றெழுத்து மந்திரம்தான் : பதவி!

இந்தக் கூட்டணியும் ஆட்டம் காணுமோ என்ற கேள்விக்குறி. ஏழு கட்சிகளில் பிரச்சகான் தாய் கட்சி, நாம்தாய் கட்சி என்ற இரண்டு கட்சிகள். இரண்டுக்கும் தலா 18 எம்.பி.க்கள். இதில் நாம்தாய் கட்சிக்கு மட்டும் 4 மந்திரி பதவிகளைத் தந்தார் பிரதமர். பிரச்சகானுக்கு மூன்று மட்டுமே.

'இதென்ன கதை? ஒரு கண்ணுக்கு வெண்ணெய்... இன்னொன்றுக்கு சுண்ணாம்பு? ஆளை விடு. நான் கூட்டணியிலிருந்து கழற்றிக் கொள்கிறேன்' என்கிறது பிரச்சகான் கட்சி.

பிரதமரின் 'சார்ட்தாய்' கட்சிக்குள்ளேயே கசமுசா. தெர்ட்தாய் என்றொரு 'வாழப்பாடி அணி' அதற்குள்ளே. 'கூட்டணியில் உள்ள பலாங்தர்மா கட்சியை உடனே கழற்றி விடு' என்று பிரதமருக்கு அழுத்தம் தருகிறது. ஏனாம் தெரியுமா? தம் அணியில் உள்ள ஐந்து கறை படிந்த மந்திரிகளை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்று பலாங்தர்மா பிரதமரை வற்புறுத்துகிறதாம்!

இது எப்படி இருக்கு?

**பி**ரதமர் ஸில்பர் ஆர்ச்சாவுக்கு இப்போது ஓர் எண்ணம்.

"18 எம்.பி.க்களைக் கொண்டுள்ள பிரச்சகான், 23 பேரைக் கொண்டிருக்கும் பலாங்தர்மா இரண்டு கட்சிகளையும் கழற்றி விடுவோம். பதிலுக்கு 53 எம்.பி.க்களைக் கொண்ட சார்ட் பட்டானா கட்சியை அணைத்துக் கொள்வோம். 41 போனால் என்ன? 53 வருகிறதே! பன்னிரண்டு லாபம்"

ஆக இப்படிப் போய்க் கொண்டிருக்கிறது தாய்லாந்து அரசியல்.

**ஒ**ரு பக்கம் இப்படி இருக்க, அந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சியோ, வருடா வருடம் எட்டு சதவீதத்துக்குக் குறையாமல் இருக்கிறது! இது ஒரு புதிர். வெளிநாட்டு முதலீட்டாளர்களைக் காந்தமாய் இந்த நாடு கவர்கிறது. இதுவும் ஒரு புதிர்.

ஒருவேளை 'இரவு நேரக் கவர்ச்சிகள்' காரணமாக இருக்கலாமோ? அட, சில ஆயிரங்களில் கிடைக்கும் 'இதற்காக' பிலியன் பில்லியனாகக் கொண்டு வந்துக் கொட்டித் தொழில் தொடங்குவார்களா என்ன, என்று பதில் கேள்வியும் எழுகிறது.

சரி, இப்போதைய தாய்லாந்தின் ஏழு கூட்டணி அரசு எத்தனை நாள் தாங்கும்? சொல்ல முடியாது. இதற்கு முன் சுவான் லீக்பய் தலைமையிலான கூட்டணி அரசு இரண்டு வருடம் பத்து மாதம் தாக்குப் பிடித்தது.

ஸில்பா ஆர்ச்சா அரசுக்கு ஜூலை மாதம் ஓர் ஆண்டு முடிந்தது. இப்போதைக்கு அவ்வளவுதான் சொல்ல முடியும்.

**-ராணிமைந்தன்**

# குறையொன்று

‘மு னியே நான்முகனே முக்கண்ணப்பா...’ என்று நம்மாழ்வார், திருவாய்மொழியிலே ஈச்வரனை விசேஷமாக அனுபவிக்கிறார்.

மூன்று நேத்திரங்களால் (கண்கள்) சொல்லப்படக்கூடியவன் பரமசிவன். அதே போல், மூன்று நேத்திரங்களால் சொல்லப்படக்கூடியவன் நரசிம்ஹன் – லக்ஷ்மி நரசிம்ஹன்.

மூன்று நேத்திரங்களையுடையவன் நரசிம்ஹன் என்று தாபனீய உபநிஷத் கொண்டாடுகிறது. இதை சுவாமி தேசிகன் எடுத்துச் சொல்கிறார் :

காஞ்சிபுரம் அருகே திருவேரிக்கை என்கிற க்ஷேத்ரம். அங்கே வேகவதி நதி தீரத்திலே அமைந்துள்ளது அது. ‘இப்படி அமர வேண்டும் – இங்கே இருக்க வேண்டும்’ என்கிற கட்டாயமில்லாமல் பகவான் தானாகவே இஷ்டமாய் அமர்ந்திருக்கும் க்ஷேத்ரம்! அதனால் அதற்கு காமாஸிகை என்றொரு பெயர். அந்த க்ஷேத்ரத்திலே, அவன் அமர்ந்திருப்பதைப் பார்த்த மாத்திரத்திலே சுவாமி தேசிகன் வாக்கிலே ஓர் அஷ்டகமானது உதிக்கிறது. அதிலே வருகிற வரிகள் :

**தபன இந்து அக்னி நயன :**

---

**தாபனீய ரஹஸ்யானாம்**

சார :

தாபனீய உபநிஷத்தில் சொல்லப்பட்ட சமஸ்த ரகசியங்களின் சாரமாய் இருக்கக் கூடியவன் காமாஸிகா ஹரி :

இங்கு அமர்ந்திருக்கிறானே, அந்த நரசிம்ஹன் எப்பேர்ப்பட்டவன்...? பகவானுக்கு ஒரு பக்கம் வலது திருநேத்திரம் – சூரியனே (தபன) வலது திருநேத்ரமாக அமைந்துள்ளது. இடது திருநேத்திரம் சந்திரன் (இந்து). இடையிலே ஒரு நேத்திரம் – அது அக்னி.

எல்லோருக்கும் நேத்திரமாய் இருக்கக் கூடிய பரமாத்மாவுக்கு இந்த மூன்று தேவதைகள் நேத்திரமாய் இருக்கிறார்கள்!

ப கவானுடைய நேத்திரத்திலிருந்தே சூரியன் உண்டானான் என்று புருஷ ஸூக்தம் சொல்கிறது. இப்படி பகவானின் நேத்திரத்திலிருந்து தோன்றியவனே அவனுக்கு வலது நேத்திரமாய் இருக்கிறான்!

சூரியனுக்கு என்ன விசேஷ சக்தி? நித்யம் அவனை நமஸ்காரம் பண்ண வேண்டும்; அனுதினம் அவனை வந்தனம் பண்ண வேண்டும். சூரியனைப் பார்க்காமல் யாராவது சாப்பிடுவாரேயானால், அவர் சாணியிலே தோன்றும் புழுக்களைக் காட்டிலும் மட்டமானவர் என்று வேதம் ஒதுக்குகிறது! அத்தகையவன் மனிதனாய் இருந்தும், அல்பமான இருமியைக் காட்டி



# ப்பாவை 17

லும் மட்டமானவன்!

எவனொருவன் சூர்ய நமஸ்காரம் செய்யாமல் வாழ்கிறானோ, அவன் வாக்கு நன்றாக இராதாம்! எப்போதும் அமங்கலமே அவனிடத்திலிருந்து வெளிப்படுமாம்! அவன் எதைக் கேட்டாலும் பாவமான வார்த்தைகளாகவே இருக்குமாம்! இப்படி, காதிலும் அமங்கலமே விழுகிற, பேசுவதும் அமங்கலமேயான ஒருத்தனிடம் யாராவது போவார்களோ...?

சூரியனை ஆராதித்தால் ஆரோக்கியம் வாய்க்கும் என்கிறது சாஸ்திரம்.

சூரியன் நான்கு நாள் பிரகாசிக்கவில்லை என்று வைத்துக் கொள்ளுங்கள்... உலக சலனம் நடக்குமா? சரீரம் வேலை செய்யுமா?

சூர்ய : என்ற சொல்லுக்கே, நம்மை சத்கர்மானுஷ்டானத்திலே செலுத்துகிறவன் என்றுதான் பொருள். நம் இந்த்ரியங்களெல்லாம் வேலை செய்யணும்னா சூர்யன் பிரகாசிக்கணும்.

சூர்யன் பிரகாசிக்காத நாளை துர்தினம் என்றே சாஸ்திரம் சொல்கிறது. கர்மானுஷ்டானங்களுக்குத்

லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்





"நீங்க இதுவரைக்கும் செய்த குற்றங்களுக்காக வேணும்னா முன் ஜாமீன் தர்றேன்; ஆனா இனிமே செய்யப்போற குற்றத்துக்கும் முன் ஜாமீன் கேக்கறீங்களே... அதெல்லாம் கொஞ்சங்கூட நல்லா இல்ல..."
– ஆர்.கே.

தகாத நாள் அது. மகான்களாகப்பட்டவர்கள், மப்பும் மந்தாரமுமாக இருக்கிற நாட்களிலே சாப்பிட மாட்டார்கள். என்றைக்கு சூரியன் தென்படுகிறதோ, அன்றைக்கு அவனைப் பார்த்துவிட்டே உணவு கொள்வார்கள்.

இப்பேர்ப்பட்ட சூரியன் பகவானின் வலது திருநேத்திரமாய் அமைந்திருக்கிறான். அவன் என்ன உபகாரம் பண்ணுகிறான் நமக்கு...? ஞானத்தையும் ஐச்வர்யத்தையும் கொடுக்கிறான்.

ஞானத்தைக் கொடுக்கிறான் என்பதை விசேஷமாய் எப்படி அறியலாம் என்றால் அதற்கொரு கதையிருக்கிறது.

வைசம்பாயனர் பல பேருக்கு வேதத்தைச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். வியாசரிடம் கற்ற யஜுர் வேதத்தைப் பல சிஷ்யர்களுக்குக் கற்றுக் கொடுத்தார். ஒருநாள், நதியிலே நீராடி விட்டு, சிந்தனை பண்ணிக் கொண்டே ஆசிரமத்தை நோக்கி வந்தார் வைசம்பாயனர். அப்போது நடு வழியிலே வேதத்தைப் பூரணமாகக் கற்றுணர்ந்த பிரம்மசாரி சிறுவன் படுத்திருந்தான். அதைக் கவனிக்காது, அவன் வயிற்றிலே கால் வைத்து விட்டார் வைசம்பாயனர். அவன் துடிதுடித்து மாண்டு போய் விட்டான்!

வைசம்பாயனருக்கு பிரும்மஹத்தி தோஷம் வந்து விட்டது. ரொம்ப வருத்தம் அவருக்கு... ஆசிரமத்திலே உட்கார்ந்திருக்கிறார். எல்லா சிஷ்யர்களும் வந்து வணங்குகிறார்கள் அவரை...

சிஷ்யர்கள் பண்ணும் பாவம் ஆசார்யர்களை அடையும். இங்கோ, ஆசார்யரே பாவம் பண்ணியிருக்கிறார். சிஷ்யர்களெல்லாருமாய்ச் சேர்ந்து ஏதாவது பிராயஸ்சித்த கர்மா அனுஷ்டித்தால் அது போகும். வைசம்பாயனரும் அவர்கள் அவ்வாறு அனுஷ்டித்து, பிரும்மஹத்தி தோஷத்திலிருந்து தம்மை விடுவிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

சிஷ்யர்களெல்லாம், 'அப்படியே நாங்கள் பண்ணுகிறோம்... அதைக் காட்டிலும் ஒரு கடமை எங்களுக்கு உண்டா...!' என்று முன் வந்தார்கள். 'ஆசார்யருக்கு ஏற்பட்ட கஷ்டத்தைப் போக்கவில்லையென்றால் சிஷ்ய ஜன்மா எதற்கு...?' என்றார்கள்.

அப்போதுதான், அந்த சிஷ்யர்களுள் ஒருவரான யாக்ஞவல்க்யர் சொன்னார் : "இத்தனை பேர் எதற்கு...? நான் ஒருவனே ஆசார்யனின் பிராயஸ்சித்தம் பண்ணி கஷ்டத்தைப் போக்குவேனே..."

வைசம்பாயனருக்குக் கடும் கோபம் வந்தது: "எல்லோரையும் சாமானியர் என்று மதித்து நீயொருவனே உயர்வானவன் என்று காட்டிக் கொண்டாயே... அது உன் அகங்காரத்தைக் காட்டுகிறது. இவ்வளவு அகங்காரமுடைய ஒரு சிஷ்யன் எனக்கு வேண்டியதில்லை! நீ வெளியே போ, ஆசிரமத்தை விட்டு" என்றார்.

யாக்ஞவல்க்யருக்கு அதற்கு மேல் கோபம்! "தங்களிடத்திலே இருக்கிற பரிவினாலே, ப்ரீதியினாலே சொன்ன வார்த்தையேயொழிய இவர்களையெல்லாம் மட்டம் தட்டுவதற்காக நான் பேசவில்லை.... அப்படி நீங்கள் நினைக்கிறது அனுசிதம். என் எண்ணத்தைப் புரிந்து கொள்ளாமல் என்னைப் போகச் சொன்னீர்களே! உங்கள் ஆசார்யத்வம் எனக்கு வேண்டியதில்லை!" என்று சொல்லிவிட்டார்.

"ஆசார்யத்வம் வேண்டியதில்லையானால் என்னிடம் கற்ற வேதத்தை மட்டும் எடுத்துக் கொண்டு போக முடியுமா...? அதனால் வேதத்தை முழுக்க கக்கிவிட்டுப் போ!" என்று வைசம்பாயனர் பேசிவிட்டார்!

– கடன் கொடுத்தவன், சண்டை அதிகமானால் 'காசை எண்ணி வைச்சுட்டுப் போ' என்பானே அது போல...!

யாக்ஞவல்க்யர் சளைக்கவில்லை. அப்படியே ஒரு மாமிச கோளமாக மொத்தத்தையும் கக்கி விட்டார். கக்கிவிட்டு, மகா கோபத்தோடு அகன்று போய் விட்டார்!

வேத வித்தை கேட்பாரற்றுக் கிடந்தது. ஒரே மாமிசம் சூழ்ந்து கிடந்தது! வைசம்பாயனர் பார்த்தார். மற்ற சிஷ்யர்களையெல்லாம் கூப்பிட்டு, தித்திரா என்கிற புறா வகையாக அவர்களை மாற்றினார். மாமிசத்தைச் சாப்பிடச் செய்தார். அவர்களும் அப்படியே மாறி அந்த வேத வித்யை வீணாகாமல் அதைத் தரித்தார்கள்.

இவ்வாறு கக்கப்பட்டு, மறுபடியும் கொள்ளப்பட்டு தரிக்கப்பட்டதனாலே, கிருஷ்ண-யஜுர்வேத தைத்ரீய சம்ஹிதை என்று அந்த

சம்ஹிதைக்குப் பெயர். (இத்திரா - என்கிற புறாவின் பெயரிலிருந்து வந்தது 'தைத்ரீய')

வேதமிழந்த யாக்ஞவல்க்யர் சமுத்திரக் கரையிலே போய் நின்று கொண்டார். சூரியனைப் பார்த்து தியானம் பண்ணினார்.

ஆச்சர்யம் பாருங்கள்...! சூரியன் அவருக்குப் பிரத்யட்சமானான். எப்படி...? ஒரு குதிரை வடிவிலே தோன்றினான்!

(அதனால்தான் இப்போதும் முறைப்படி முத்திரையிட்டு சூரியனைப் பார்த்துவிட்டு, கண்ணை மூடினோமானால், குதிரை ரூபம் கண்ணுக்குள்ளே தெரியும்.)

யாக்ஞவல்க்யரின் முன் தோன்றிய சூரியன் 'உனக்கு என்ன வேணும்?' என்று கேட்டான்.

"என் ஆசார்யர் வைசம்பாயனர் என்னை அனுப்பி விட்டார். அவருக்குத் தெரியாத வேதம் முழுதும் எனக்கு வேண்டும்..." என்றார் அவர்!

உடனே சூரியன், குருவுக்கு என்ன தெரியாதோ, அதை சிஷ்யருக்கு உபதேசம் பண்ணினார். அப்படி சூரியன் உபதேசம் பண்ணியதுதான் சுக்ல யஜுர்வேதம்.

இந்த வரலாறு எதை உணர்த்துகிறது என்றால், சூரியன் ஆரோக்கியத்தை மாத்திரம் கொடுப்பவன் அல்ல.... சிறந்த ஞானத்தையும் கொடுப்பவன். வேதத்தையே கொடுக்கக்கூடியவன்.

ஐச்வர்யத்தையும் கொடுக்கக் கூடியவன் சூரியன். சத்யபாமாவினுடைய தந்தை சத்ராஜித். சூரியனை அவன் உபாஸனை பண்ணினான். அப்போது சூரியன் அவனெதிரே பிரத்யக்ஷமானான். 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டான்.

சூரியனின் கழுத்திலே அழகான ஒரு மணி இருந்தது. அந்த மணியைத் தர வேண்டும் என்று கேட்டான் சத்ராஜித்.

ச்யமந்தக மணி என்று அதற்குப் பெயர். சூரியனும், அதைக் கேட்டவுடனே கழற்றிக் கொடுத்துவிட்டான். அதை வைத்திருப்பவருக்கு ஒரு நாளைக்கு எட்டு பாரம் தங்கம் கிடைக்குமாம்! அப்படிப்பட்ட ஐச்வர்யம் வாய்த்தது சத்ராஜித்துக்கு...

அதனாலேதான் அவன் மகள் சத்யபாமாவுக்கு அவ்வளவு கர்வம்! ஒருவேளை பூண்ட நகைகளை அடுத்தவேளை பூண மாட்டாளாம்!

எனவே, அப்பேர்ப்பட்ட ஐச்வர்யம் தரக் கூடியவன் சூரியன்.

அன்னத்தைக் கொடுக்கக்கூடியவன் சூரியன்.

பாண்டவர்கள் வனவாசம் பண்ணுகிறார்கள்... அந்த நேரத்திலே, அவர்களுக்கு உணவு கிடைக்க வேண்டுமே. குறிப்பாக பீமசேனனுக்கு வயிறு நிரம்ப வேண்டுமே என்று கவலை வந்தது வியாஸ பகவானுக்கு! உடனே பஞ்சபாண்டவர்களுக்கு சூரியன் பேரிலே ஒரு சுலோகத்தை உபதேசம் பண்ணுகிறார், வியாஸ பகவான். அந்தனை பேரும் அதைச் சொல்ல, சூரியன் எதிரே பிரத்யட்சமானான். ஒரு யந்திரத்தை அவர்களுக்குக் கொடுத்தான். அக்ஷய பாத்திரம் என்பது அதன் பெயர். எவ்வளவு அன்னம் வேண்டுமானாலும் அது கொடுக்கும்! சகல பதார்த்தங்களையும் கொடுக்கும். அன்றைய பொழுதுக்கு அலம்பிக் கவிழ்த்து வைக்கிறவரை கொடுத்துக் கொண்டேயிருக்கும்...!

அந்த அக்ஷய பாத்திரத்தைக் கொண்டு தாங்களும் நன்றாகச் சாப்பிட்டு, வனவாசத்தில் தங்களைத் தேடி வந்தவர்களையும் உபசரித்தார்கள் பஞ்சபாண்டவர்கள்.

இப்படி, ஐச்வர்யமா? ஆரோக்யமா? ஞானமா...? அன்னமா...? எது வேண்டுமானாலும் கொடுக்கும் சக்தி சூரியனுக்கு இருக்கிறது. அது சர்வேச்வரனான பகவானால் கொடுக்கப்பட்ட சக்தி.

அப்படிப்பட்ட சூரியன், நரசிம்ஹனின் வலது திருநேத்திரமாய் இருக்கிறான் என்றால்... பகவான் அந்த திருநேத்திரத்தினால் நம்மை கடாக்ஷிக்கும்போது ஞானமும் ஐச்வர்யமும் ஆரோக்யமும் அன்னமும் நமக்கு சங்கல்பிக்கின்றன.

எனவேதான் நரசிம்ஹ தியானத்துள்ளே சூரியனும் அடங்கிவிடுகிறான்.

(தொடரும்)

**வாசகர்கள் கவனத்திற்கு....**

'குறையொன்றுமில்லை' தொடரில், 25.8.96 இதழில் இடம்பெறவேண்டிய 15-வது அத்தியாயம் 1.9.96 இதழிலும், 16-வது அத்தியாயம் 25.8.96 இதழிலுமாக மாற்றி அச்சாகி விட்டன. எதிர்பாராமல் ஏற்பட்டு விட்ட இத்தவறுக்கு மிகவும் வருந்துகிறோம். அத்தியாயங்களைச்சேர்த்து வைக்கும் அன்பர்கள் இதைக் கவனத்தில் கொள்ள வேண்டுகிறோம்.

- ஆர்.

**யா**ரோ தன்னை கவனிப்ப தாய் உணர்ந்தாள் தீபா.

கல்யாண மண்டப அமளியில் யார் தன்னை உறுத்துப் பார்க்கப் போகிறார்கள்?

கேள்விக்குறியுடன் சுற்றுமுற் றும் நோக்கினாள்.

அவனைக் கண்டதும் திகைத் தாள்.

பாலாஜி!

கையிலிருந்த குங்குமச் சிமிழ் தடுமாறிக் கீழே விழுந்தது. தரையெங்கும் குங்குமம் சிதறியது.

"குங்குமம் கொட்டினா கல்யாணம்பாங்க. சரியாப் போச்சு பார்த்தீங்களா?"

யாரோ 'கடி'த்தார்கள். அதற்குச் சிலர் சிரித்தார்கள்.

மீண்டும் ஒருமுறை தீபாவின் பார்வை அவனிடம் சென்று மீண்டது.

மனசுக்குள் ஏதோ ஒரு அடைப்பு திறந்து கொண்டு, அவளைச் சுழலில் அமிழ்த்தியது.

"இந்தா, இந்த குங்குமச் சிமிழ் மூலம் எல்லோருக்கும் கொடு."

மதுரை அத்தை நீட்ட வாங்கிக் கொண்டாள்.

சித்தி பெண் கல்யாணம். வந்த இடத்தில் பாலாஜியின் சந்திப்பு.

ஓரக் கண்ணால் மீண்டும் பார்த்தாள்.

அவன் இன்னும் தன்னையே கவனித்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

சங்கடமாயிருந்தது அவன் பார்வை. இன்னும் ஏழெட்டுப் பெண்களுக்குக் குங்குமம் கொடுத்தாள்.

நாதஸ்வரம் 'குறையொன்றுமில்லை, மறை மூர்த்தி கண்ணா'வில் இழைந்து கொண்டிருந்தது.

மூன்று வருடம் இருக்குமா அவனை கடைசி யாய்ப் பார்த்து?

ஆள் கொஞ்சம் சதை போட்டிருக்கிறான். கட்டை மீசை அவன் முகத்துக்கு எடுப்பாய் இருக்கிறதே.

சேச்சே! என்ன நினைப்பு இது? கூடாது! அவன் எப்படியிருந்தால்



கிருஷ்ணா

என்ன?

கமல்ஹாசனையோ, அஜீத்தையோ டீ.வியில் பார்த்தால் கமெண்ட் அடிப்பதில்லையா, அது போலத்தான் இதுவும்.

மனசு, இரண்டாய்ப் பிரிந்து பட்டிமன்றம் நடத்தியது.

அஜீத் வேறு, இவன் வேறு! இவன் உன் முன்னாள் காதலன்!

காதலன்! மனசுக்குள் அந்த வார்த்தை தோன்றியதும் திடுக்கிட்டுப் போனாள்.

காதல்! பாலாஜிக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை என்று யாரோ சொன்னார்களே?

மனசு குறுகுறுத்தது.

"மனைவின்னா நீதான். வேறு யாரையும் நான் ஏத்துக்க மாட்டேன்."

இன்னமும் தன்னை நினைத்தே ஏங்கி, திருமணத்தை மறுக்கிறானோ?

பாலாஜி இருக்கும் பக்கம் இயல்பாய் பார்வையைச் சுழற்றினாள்.

அவன் கொஞ்சம் இடம் பெயர்ந்து தன்னை கவனிப்பதற்கு வசதியாய் நிற்பது தெரிந்தது.



# அதிர்வு

அவன் மேல் கோபம் வந்தது. எதற்கு இப்படிப் பார்க்கிறான்? என்ன எதிர்பார்க்கிறான் தன்னிடம்? போய்ப் பேசலாமா?

சேச்சே, வேண்டாம்! தங்கள் காதல் அரசல், புரசலாய் இங்குள்ள பலருக்குத் தெரியும்.

வேறு வினையே வேண்டாம்! ஊர் வாய் பொல்லாதது.

"என்ன தீபா பிசியா? தங்கை கல்யாணமாச்சே? உன் வீட்டுக்காரர் வந்திருக்காரா?"

தூரத்து சொந்தம். மாமி முறை வேண்டும்.

"அவரும் வந்திருக்கார். இங்கேதானே இருந்தார்?"

கணவனைத் தேடினாள். காணோம். சிகரெட் பிடிக்க வெளியே சென்றிருப்பாரோ?

"சிகரெட்!"

பாலாஜியின் முகத்தில் அவள் பார்வை நிலைத்தது.

இவன் தனக்காக சிகரெட் பிடிப்பதை விட்டானே! இப்போதும் அது நீடிக்கிறதா? இல்லை, காதல் தோல்வியில் மறுபடியும் ஆரம்பித்து விட்டானா?

ஆளைப் பார்த்தால் 'பம்'மென்றுதான் இருக்கிறான். இந்த மூன்று வருடத்தில் சகஜ நிலைக்கு வந்திருப்பான்.

ச்சே! என்ன இது, எங்கு சுற்றியும் ரங்கனை சேவி என்பது போல பாலாஜியை சுற்றியே நினைப்பு ஓடுகிறது.

இது தப்பு! இப்போது நான் திருமதி தீபா பிரசாத். அன்னிய ஆடவன் நினைப்பு கூடாது.

அவள் குடியிருந்த அதே தெருவில்தான் பாலாஜியின் குடும்பமும் வசித்தது. சுற்றி வளைத்த சொந்தம்.

"காதலுக்கு பணம் தேவையில்லாம இருக்கலாம். திருமண வாழ்க்கைக்குக் காசுதான் ஆதாரம். சரியான வேலையிலே இல்லாத பயலுக்கு உன்னைக் கொடுக்க மாட்டேன்."

அப்பாவின் தீர்மானமான

முடிவுக்கு வீட்டில் அப்பீல் கிடையாது. இவளின் உண்ணாவிரதம், அழுகையெல்லாம் வியர்த்தமாகிப் போனது, அப்பாவின் முன்னே.

"இப்ப என்னிடம் காசு இல்லே. நீ இருக்கே. ஆனால் பின்னாடி என்னிடமும் பணம் இருக்கும். ஆனால், ஆனால்..."

பாலாஜி முகம் கலங்கி, உடல் தளர்ந்து, குரல் கமறச் சொன்ன காட்சி, 'ரீப்ளே' ஆனது உள்ளே.

உண்மைதான்! அவன் சொன்னது போல ஆகிவிட்டான்! பிசினசில் கொழிக்கிறானாம். இப்போது அவனிடம் பணமிருக்கிறது. ஆனால் அவன் காதலித்த பெண் கைமாறிப் போய் விட்டாள்.

அவன் மேல் பிறந்த பச்சாதாப உணர்வை நிறுத்த வழியின்றித் தவித்தாள், திகைத்தாள் தீபா.

"கூந்தலை வெட்டினுட்டியா? நீ காலேஜ்ல படிக்கறச்சே எவ்வளவு நீளம் தொங்கும்?"

மாமா பெண் சுமதி அருகில் வந்து தோளில் கைவைத்தாள். கூந்தலைக் கையிலெடுத்து நுனியால், தீபாவின் முகத்தில் செல்லமாய்த் தட்டினாள்.

அனிச்சையாய் தீபாவின் பார்வை பாலாஜியிடம் சென்று மீண்டது.

அவன் பார்வை இப்போது தன் கூந்தலிலேயே பதிந்திருப்பது கண்டாள்.

'இணைந்த கைகள்' சினிமா பார்த்தது மனசில் ஓடியது.

இவள் முன் சீட். சரியாய் நேர்பின்னால் பாலாஜி.

இவளின் பெரிய கூந்தலை படம் முடியும் வரை தன் கைகளுக்குள் அவன் பொத்தி வைத்திருந்தது அப்புறம்தான் தெரிந்தது.

படம் முடிந்து எழும்போது, தலை பின்னுக்கு இழுபட, சடாரென சீட்டில் சாய்ந்தாள்.

"முடி மாட்டிக்கிட்டது சேரில்"

இவளுக்கு மட்டும் தெரியும்படி கண்ணடித் தபடி, முடியை எடுத்து விட்டான்.

"உங்களுக்கு தைரியம் ஜாஸ்திதான். அப்பா பக்கத்திலேயிருக்கும்போதே குறும்பு பண்றீங்களே" என்றாள் அடுத்தநாள் சந்திப்பில்.

"உன் கூந்தலை கைக்குள்ள பொத்தி வைச்சிருந்தப்ப, உன்னையே கையிலே மூடி வைச்சுக்கிட்ட சிலிர்ப்பு எனக்குள்ளே, தெரியுமா?"

"உங்க கைக்குள்ளே அடங்குற சின்ன பாப்பாவா நான்?" என்றாள் குறும்பு மின்னும் கண்களுடன்.

"எனக்குள்ள அடங்கறியோ, என்னவோ, ஆனால் என் மனசுக்குள்ளே நிறைஞ்சிருக்கற பெரிய பாப்பா நீ மட்டும்தான்."

அவன் குரலில் வழிந்த காதலில், உருகிப் போய் நின்றாள் தீபா.

"கெட்டி மேளம், கெட்டி மேளம்!"

டம,டமவென்ற மேளச் சத்தத்தில் திடுக்கிட்டு நினைவு கலைந்தாள்.

ம்ஹூம்! இங்கிருக்கக் கூடாது. திமிரும் குதிரையாய், மனசை திசை திருப்ப முயன்றாலும், தோற்றுப் போய், மீண்டும், மீண்டும் பாலாஜியை நோக்கியே ஓடுகிறது.

மனசளவில் செய்தாலும், இது துரோகம்! கூடாது, பழையன கழிந்து, புதியன புகுந்து விட்டது. பழைய குப்பைகள் எதற்கு இனியும்?

குப்பையா உன் காதல்? எட்டாவது வகுப்புப் புத்தகம், பத்தாவது வகுப்புக்குப் போன பிறகு பயன்படாத பொருள்தானே? என்ன இது குப்பை, எட்டாவது, பத்தாவது என்று?

"என்ன தீபா, தனக்குத்தானே பேசிக்கறே?"

கேட்டபடியே அருகில் வந்த கணவனைக் கண்டதும், வெளிறிப் போனாள்.

குற்ற உணர்வா, உறுத்தலா என்று புரியாத உணர்வில் அவன் கையை கெட்டியாய் பிடித்துக் கொண்டாள். ஆறுதலாயிருந்தது.

"நாம சாப்பிட்டுட்டுக் கிளம்பலாமா? கல்யாணம்தான் முடிஞ்சு போச்சே."

வியப்புடன் அவளை நோக்கினான் பிரசாத்.

"நானும் கூட சீக்கிரம் போகலாமான்னு கேட்க நினைச்சேன். 'மேட் ஃபார் ஈச் அதர்' நாமதான்."

தீபாவுக்கு சுருக்கென்றது.

முக்கிய அவசர வேலை இருப்பதாய் சொல்லி, தாம்பூலப் பை வாங்கிக் கொண்டு கிளம்பினர்.

பேருந்தும் உடனே கிடைத்தது. ஒரு மணி நேரப் பிரயாணம். வசதியான இருக்கை.

"என்னங்க" என்றாள் பத்து நிமிட பயணத்தில்.

"என்னடா?"

"மாடு மேய்ச்சுக்கிட்டு இருந்த உன் பையனை சவூதி அரேபியா அனுப்புனியே, அங்கே அவன் என்ன செய்யறான்?"

"ஒட்டகம் மேய்ச்சுக்கிட்டு இருக்கான்!"

— எஸ். முகம்மது யூசுப்



# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை — அமரர் கல்கி பிறந்த தின விழா



அமரர் கல்கி அவர்களின் எழுத்தாற்றலைப் போலவே அவரது தேச பக்தியும் கலையார்வமும் உலகறிந்த விஷயங்களே.

எனவேதான் அவர் நினைவாக, இளம் இசைக் கலைஞர் ஒருவருக்கு கல்கி விருது வழங்கி கௌரவிக்க முடிவெடுக்கப்பட்டுள்ளது.

இதனை இவ்வாண்டு பெறுபவர் இளம் பாடகர் திரு. என். விஜய் சிவா.

விருது வழங்கி சிறப்புரை நிகழ்ச்சி ஆற்றி வழங்குகிறார்:

திரு. செம்மங்குடி சீனிவாச அய்யர்.

விருதளிப்பைத் தொடர்ந்து, தேச பக்தி பாடல்களை முழுநேர இசை நிகழ்ச்சியாகத் தொகுத்து வழங்குவார் திரு. விஜய் சிவா.

இந்திய சுதந்திரத்தின் ஐம்பதாவது ஆண்டையும் அமரர் கல்கி அவர்களின் 97வது பிறந்த நாளையும் ஒரு சேரக் கொண்டாடும் இந்நிகழ்ச்சிக்கு அனைவரும் வருக!

**நிகழ்ச்சி நிரல்:**

நாள் : செப்டம்பர் 9, 1996.
இடம் : ஸ்ரீநிவாஸ சாஸ்திரி அரங்கம், லஸ், மயிலாப்பூர்.
நேரம் : மாலை ஆறு மணி.

**6.30 மணிக்கு இசை நிகழ்ச்சி**

திரு. என். விஜய் சிவா– பாட்டு
குமாரி. பி. காயத்ரி– வயலின்
திரு. ஜே. வைத்யநாதன் – மிருதங்கம்
திரு.பி.எஸ். புருஷோத்தம்– கஞ்சிரா

– நிர்வாக அறங்காவலர்

ஒருவர் அறியாத ரகசியம் மற்றவரிடம் கிடையாது இருவருக்குள்ளும். எந்தத் தரமாக இருந்தாலும் வெளிப்படையாய்ப் பகிர்ந்து கொள்ளும் பக்குவம்.

"நான்... இவ்வளவு அவசரமாய் கிளம்பி வந்ததை ஏன்னு கேட்கலியே..."

அவன் சிரித்தபடி நோக்கினான்.

"என்னாலே அங்கே இருக்க முடியாதபடி சங்கடம்."

குரல் தழைந்து போய் ஒலித்தது தீபாவுக்கு.

"பாலாஜி வந்திருந்தார்."

அவன் சற்று திரும்பி அமர்ந்து அவள் முகத்தைப் பார்த்தான்.

"மனசுல பழைய நினைவாகவே ஓடிச்சு. அதை ஏத்துக்கவும் முடியலே. தடுக்கவும் முடியலே. கட்டுப்பாடு இழந்த வண்டி மாதிரி நினைவுகள் ஓட ஆரம்பிச்சுடுச்சு."

அவள் விசும்பினாள்.

"உங்களுக்குத் துரோகம் பண்ற மாதிரி உறுத்தல். இன்னமும் அவனை மறக்கலியா இந்த மனசுன்னு வியப்பும், கோபமும். என் மேலேயே எனக்கு... எனக்கு ஆத்திரம். ஆதர்ச தம்பதியா நாம வாழறதாய் பெருமைப் பட்டுக்கிட்டு இருக்கேனே, அது பொய்யோன்னு குமுறல். மண்டபத்தை விட்டு வெளியே வந்தப்புறம்தான் தப்பிச்சுட்ட நிம்மதி. நான் ஏன் அப்படி நடந்துக்கிட்டேன்?"

குற்ற உணர்வோடு தழுதழுத்தவளின் விரல்களைப் பிரித்து கோத்துக் கொண்டான் பிரசாத்.

"அசடு. கண்ணைத் துடை" என்றான் பிரியமாய்.

"நான் தப்பு செஞ்சுட்டேன்."

"நீ எந்தத் தவறும் செய்யலே தீபா."

"அப்ப ஏன் என் மனசுல பாலாஜியைப் பற்றிய நினைவுகள், நிகழ்வுகள் ஓடணும்?"

பிரசாத் அவளை உற்றுப் பார்த்தபடி சொன்னான்.

"காவிரி பாலத்துல நீ நடந்திருக்கேதானே?"

"ரொம்ப பிடிச்ச விஷயமாச்சே, அப்படி நடக்கறது. ஏன்?"

"நாம பாலத்துல நடந்து போறப்ப, பஸ்ஸோ, லாரியோ நம்மை கடந்து போறப்ப என்ன நடக்கும்?"

"பாலம் அதிரும். நான் கூட உங்களை இது பற்றிக் கேட்டிருக்கேனே. பாலத்தோட அமைப்பு அப்படி. அதனாலே பாலம், பல வீனமானதுன்னு அர்த்தமில்லேன்னு சொன்னீங்களே?"

"கரெக்ட்! அதே மாதிரியான அதிர்வுகள் தான் உன் மனசுல உண்டாகியிருக்கு. மனசோட அமைப்பு, இயல்பு அப்படி. அது இயற்கையானதும் கூட. பஸ் கடந்து போன பின்னாடி அதிர்வு இல்லாத மாதிரி, இப்ப உன் மனசும் தெளிஞ்சிருக்குமே?"

தீபா கண்மூடி யோசித்தாள். தலையசைத்தாள். கண் திறந்து வியப்புடன் கணவனைப் பார்த்தாள்.

"எப்படி, எப்படி இவ்வளவு அழகாய், சரியாய் இதை புரிஞ்சுக்கிட்டீங்க?"

"கல்யாண மண்டபத்திலே நான் வந்தனாவைப் பார்த்தேன்" என்றான் பிரசாத்.

வந்தனா, அவன் காதலித்த அத்தை பெண்!

**வீ**டு முழுவதும் வீணையின் இசை கமழும் சூழல். தந்தை டாக்டர் ராமனாதனிடம் இசை பயில வருவோரின் பயிற்சி. எல்லாம் சேர்ந்து சிறு வயதிலேயே வீணை வாசிப்பில் ஆர்வத்தைத் தூண்டிவிட்டு விட்டது. அதற்குத் தகுந்த மாதிரி நான்கைந்து வயதிலேயே, குழந்தை கீதாவுக்கு ஏற்ற மாதிரி சிறிய வீணை ஒன்றை வாங்கிக் கொடுத்தார் அப்பா. வீணை ராமனாதனாக அவர் கச்சேரிகள் நிகழ்த்தியபோது, கூட வாசிக்க ஆரம்பித்தார் எட்டு வயது கீதா.

அமெரிக்கப் பல்கலைக் கழகம் ஒன்றில் டாக்டர் ராமனாதன் பணியாற்றப் போனபோது, கூடவே சென்றவர் கீதா. ஒரு கட்டத்தில் அவருக்கு வலப்புறத்தோள் பகுதியில் ஒரு கோளாறு ஏற்பட்டதால் வீணையை மீட்ட முடியாமல் போனது. அதனால் அவர் பாட ஆரம்பித்தார். "அப்பா பாடும் போது பக்கவாத்தியமாக வயலினுக்குப் பதிலாக வீணை வாசித்தேன்! மேலை நாடுகளில் சாக்ஸபோனுக்கும் பியோனோவுக்கும் தனித்தனியான இசை ஒழுங்குகள் உண்டு. ஓர் இசை ஒழுங்கு, இன்னொரு கருவிக்கு ஏற்காது. ஆனால் நம்முடைய கர்நாடக சங்கீதத்தில் பாடல் எதுவானாலும் அதை எல்லாக் கருவிகளிலும் ஒரே சீராக இசைக்க முடியும்!" என்கிறார் கீதா பென்னெட்.

"பாட்டுப் பாடுகிறவர்கள் எல்லோருமே வீணையும் கற்றுக் கொள்ள வேண்டும்" என்பாராம் டாக்டர் ராமனாதன். எனவே, இவர் வீணை நிகழ்ச்சிகளிலும் ஒன்றிரண்டு பாடல்களையும் பாடிக் கொண்டே வாசிப்பது வழக்கம். வீணை, வாய்ப்பாட்டு இரண்டிலும் நல்ல தேர்ச்சியைப் பெற அமெரிக்க நாட்கள் உதவியிருக்கின்றன.



• சிஷ்யைகளுடன் கீதா பென்னெட்

**கீ**தாவுக்கு மதுரையில் திருமணம். தந்தை ராமனாதனிடம் வீணை பயில வந்த டாக்டர் ஃபிராங்க் பென்னெட்டையே காதலித்துத் திருமணம் செய்து கொண்டார். ஹாலிவுட் திரைப்படங்களுக்கும் டீ.விக்கும் இசை 'arrange' செய்து வருகிறார் இவர். தொலைக்காட்சி நிகழ்ச்சிகளுக்காக இருமுறை 'எம்மி' விருது பெற்றவர் பென்னெட். மிருதங்கமும் வாசிப்பார். டி.என். கிருஷ்ணன், கே.வி. நாராயணசாமி போன்றவர்கள் அமெரிக்கா வந்தபோது அவர்களுக்கு வாசித்திருக்கிறார்!

திருமணமான மறுநாளே தம்பதிகளாக வீணைக் கச்சேரி செய்ய வேண்டும் என்று மதுரை அங்கயற்கண்ணி சபா ஏற்பாடு செய்ததை நினைவு கூர்கிறார் கீதா.

"அடுத்த தலைமுறைக்கு நாம் என்ன செய்திருக்கிறோம் என்பதுதான் முக்கியம்" என்பாராம் ராமனாதன். வீணை மிகவும் அரிதாகத்தான் இருக்கிறது. இதை இன்னும்

அதிக அளவில் பரப்புவதுதான் தந்தையின் நினைவுக்கு ஆற்றுகிற நன்றி எனக் கருது கிறார் கீதா பென்னெட். அதனால் தந்தை மறைந்த பிறகு, தாம் பார்த்து வந்த 'கம்ப்யூட்டர் அனலிஸ்ட்' வேலையை விட்டு விட்டு முழு நேரமும் தம்மை இசைக் கலையிலேயே ஈடுபடுத்திக் கொண்டிருக் கிறார். லாஸ் ஏஞ்சல்ஸ் நகரில் 'சங்கீதா ஏஷியன் மியூசிக் சொஸைட்டி' என்கிற பெயரில் ஓர் அமைப்பை உருவாக்கி, மிகவும் ஈடுபாடுள்ள முப்பது மாணவர்களுக்கு வீணை கற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.

அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் முன்னூறுக்கும் மேற்பட்ட வீணை இசை நிகழ்ச்சிகளை நடத்தியிருக்கிறார். கர்நாடக இசைக்கு அறிமுகமில்லாத ரசிகர்கள் என்பதால் பகல்நேரங்களில் இசைக் கருவி களைப் பற்றியும், ராக, தாளங்கள் பற்றியும் பாடல்களைப் பற்றியும் விளக்கம் தருகிறார்.

"இந்திய இசை என்று மேலை நாடுகளில் பரவியிருப்பது 'ஹிந்துஸ்தானி இசைதான். நமது கர்நாடக சங்கீதம், அங்கு வாழும் நம்மவர்கள் இடையேதான் பரிமளிக்கிறது. அபூர்வமாக ஒன்றிரண்டு வெளிநாட்டார் சின்னக் கிராமத்திலிருந்து அழைப்பு வந்தாலும் போய் வீணைக் கச்சேரி செய்து விட்டு வருகிறார். "பணம் ஒரு பொருட்டே இல்லை. பட்டிதொட்டிகளிலும் வீணை நன்கு பரவ வேண்டும் என்கிற ஆசையிலேயே இதைச் செய்கிறேன்!" என்கிறார்.

முற்றிலும் பண்பாட்டு அடிப்படையில் மாறுபாடுள்ளவர்கள் கீதாவும் பென் னெட்டும். ஆயினும் "எங்களுக்கிடையே உணவு முறை, சங்கீதம் இரண்டிலும் ஒரே மாதிரியான ரசனை. வீணை கற்றுக் கொள்ளத் தொடங்கிய உடனேயே சைவ உணவுக்கு மாறிவிட்டார் பென்னெட்!" என்கிறார் கீதா.

கணவர், மகன் இருவருமே ஆங்கிலம் மட்டுமே பேசுகிற குடும்பச் சூழல். ஒரு வடிகாலாக எழுத்தை அறிமுகப்படுத்திக் கொண்டவர் கீதா பென்னெட். முன்னூறு சிறுகதைகளும் மூன்று நாவல்களும் எழுதி யுள்ள இவருக்கு முக்கியமான களம், வாழ் கின்ற அமெரிக்க வட்டாரச் சூழல்தான். இந்தியா வந்து திரும்புகிறபோது மட்டும்

# வீணைக்காக வேலையை விட்டவர்!

இந்த மண்ணைப் பற்றிய கதைகளை எழுத முடிகிறதாம்.

"சங்கீதம், இலக்கியம் இரண்டு துறைகளிலும், அதுவும் அந்நிய மண்ணில் இருந்து கொண்டு சாதனை புரிவது என்பது மிகப் பெரிய விஷயம், என்று எனது கணவர் பென்னெட்டின் பாராட்டும் உண்டு" என்று கூறும் கீதா பென்னெட், இதுவரை ஹாங் காங்கில் யாருமே வீணைக் கச்சேரி செய்த தில்லை என்கிற நிலையில் அங்கே செய்யும் முதல் வாய்ப்பைப் பெற்றிருக்கிறார்.

கீதா பென்னெட்டின் ஒரே மகன் ஆனந்த் ராமச்சந்திரன் பென்னெட், தம் முடைய டீன் ஏஜ் நிலையிலேயே மேற் கத்திய 'ஜாஸ் ஃப்யூஷன்' முறையில் வயலின் 'சி.டி.' ஒன்றை இயற்றி வெளியிட்டிருக்கிறார். டோக்கியோவில் வெளியாகியுள்ள இந்த இசை நிகழ்ச்சியில் பக்கவாத்தியமாக ஜாகிர் ஹுசைன் தபலா அமைந்திருக்கிறது!

வருவார்கள், அவ்வளவு தான்! அங்கு 'ஃப்யூஷன்' என்று ஓர் இசைக் கலவை முறை பிரபலமாக இருக் கிறது. 'த்ரிலோக் குர்த்து' என்பவர் இளைஞர்கள் மத்தியில் மிகவும் பிரபலமான ட்ரம்ஸ் இசைக் கலைஞர். 'மகாவிஷ்ணு ஜான் மெக்லாப்லின்' என்பவர் ஒரு பிரபலமான கிடார் கலைஞர். இவர்களோடு வீணை, பாட்டு இரண்டையும் கர்நாடக இசையில் இணைத்து 'ஃப்யூஷன்' நிகழ்ச்சிகளைச் செய்கிறேன். ஜெர்மனியிலும் ஐரோப்பாவிலும் இந்த நிகழ்ச்சிகளுக்காக ஆறுவாரம் சுற்றுப் பயணம் செய்ய இருக்கி றேன். அந்த நிகழ்ச்சியின் 'ஆல்பம்' வெளி யானதும், பங்கு கொண்ட கலைஞர் என்கிற முறையில் எனக்கும் ஒரு நல்ல அறிமுகம் - வரவேற்பு கிடைக்கும் என்பதால், அதை முதலீடாக வைத்து, சுத்தமான கர்நாடக இசை நிகழ்ச்சிகளை நடத்த முடியும் என நம்புகிறேன்!" என்று கூறும் கீதா பென்னெட், ஆண்டுக்கு இரண்டு முறை சென்னைக்கு வருகிறார். வரும்போது

— சுப்ர.பாலன்

வண்ணப்படம் : யோகா

"இன்றைய விலைவாசி ஏற்றத்தில் யூடிஐ-ன் எம்ஐபி
எனது வரவு செலவை மீட்ட உதவுகிறது

... இப்போது எனக்கென்ன கவலை!"

யூடிஐ
# மன்த்லி இன்கம் பிளான் '96 III

இப்போது குறைந்தபட்ச
இலக்கான ஆண்டிற்கு
**15%** ஆதாயத்தை
கொண்டது.
(வருடாந்தரமாக்கப்பட்ட
ஆதாயம் 16.08%)

## மாதாந்தர வருவாய் தேர்வு ◆ க்யூமுலேடிவ் தேர்வு

சிறப்பம்சங்கள்

- 2 தேர்வுகளைக் கொண்ட 5 வருட காலவரையைக் கொண்ட திட்டம்.
- **மாதாந்தர வருவாய் தேர்வு :** குறைந்தபட்ச இலக்கான ஆண்டிற்கு 15 சதவீதம் என்றவாறு டிவிடெண்ட் மாதாந்தரமாக முதல் ஆண்டில் வழங்கப்படும். முந்திய வருடம் முடிவுறும் முன் அடுத்துவரும் வருடங்களுக்கான டிவிடெண்ட் அறிவிக்கப்பட்டு முன்னதாகவே அனுப்பப்படும்.
- **க்யூமுலேடிவ் தேர்வு :** வருவாய் தொடர்ந்து சேர்த்துக் கொள்ளப்பட்டு முதிர்வுறும் சமயத்தில் மூலதன வளர்ச்சியாக விநியோகிக்கப்படும்.
- 3 வருடங்கள் கழித்து இரண்டு தேர்வுகளின் கீழ் என்ஏவி விலை அடிப்படையில் மறு கொள்முதல் செய்யும் வசதி.
- தேசிய ஸ்டாக் எக்ஸ்சேஞ்சில் பட்டியலிடப்படும்.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 2000/- அதிகபட்ச வரம்பு கிடையாது.
- வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 48 மற்றும் 80L ன் கீழ் வரிச்சலுகைகள்.
- வருமான வரிச்சட்டம் 1961 - ன் படி மூலாதார வரிக்கழிப்பு செய்யப்படும்.
- மாதத்தின் 15 ஆம் தேதிவரை ஏற்றுக் கொள்ளப்பட்ட விண்ணப்பங்களுக்கு அந்த மாதத்திற்கான முழு டிவிடெண்ட் வழங்கப்படும் மற்றும் மாதத்தின் 15 ஆம் தேதிக்கு பின் வந்து சேர்ந்த விண்ணப்பங்களுக்கு அரைமாத டிவிடெண்ட் வழங்கப்படும்.

CWPL/UTI/TAM/1030-96



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**
*உங்கள் வளமான நாளைக்கு*

**5 ஆகஸ்ட் முதல் 18 செப்டம்பர் '96 வரை**
**திட்டம் நடப்பிலிருக்கும்**

இடர்ப்பு நிலைமைகள் : மியூச்சுவல் ஃபண்ட் மற்றும் செக்யூரிடிகளில் செய்யப்படும் அனைத்து முதலீடுகள் மார்க்கெட் ஏற்றத் தாழ்விற்கு உட்பட்டவை. திட்டங்களின் என்ஏவி செக்யூரிடிஸ் மார்க்கெட்களை பாதிக்கும் காரணங்களால் ஏறவும் அல்லது இறங்கவும் செய்யலாம். கடந்தகால செயலாற்றல் எதிர்கால விளைவுகளைக் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. மந்த்லி இன்கம் பிளான் '96 - III என்பது திட்டத்தின் பெயரே தவிர, திட்டத்தின் தரத்தையோ, அதன் எதிர்கால வாய்ப்பையோ அல்லது ஆதாயங்களையோ ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. திட்டத்தின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று உத்தரவாதம் அளிக்கப்பட மாட்டாது குறைந்தபட்ச இலக்கான ஆண்டிற்கு 15% ஆதாயத்தை வழங்க போதுமான வருவாய் இல்லாவிடில் யூனிட்தாரர்கள் அந்த தொகை வரை யூனிட் மூலதனத்தில் இழப்பை ஏற்றுக் கொள்ள நேரிடும். முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் : யூடிஐ அலுவலகங்கள் : சென்னை : போன் : 517101, 517190, மதுரை : போன் : 38186, திருச்சி : போன் : 760060, கோவை : போன் : 214973. அல்லது முக்கிய பிரதிநிதிகள் / ஏஜென்டுகள்.

# சுஜாதா பக்கம்



"இந்தியன்" படத்தின் நூறாவது நாள் விழாவில் பேசினேன். இந்தப் படம் தமிழிலும் தெலுங்கிலும் வெற்றியடைந்து, இப்போது, 'இந்துஸ்தானி' வடிவில் அகில இந்திய ரீதியிலும் பெரிய வெற்றியின் அடையாளங்களைக் காட்டிக் கொண்டிருக்கிறது. வசனம் எழுதியவன் என்கிற ரீதியில் மிக அருகாமையிலிருந்து இதன் பிறப்பு வளர்ப்பைப் பார்த்திருக்கிறேன்.

பொதுவாகவே பத்திரிகைகள் இந்தப் படத்தை பரிவுடன் விமர்சனம் செய்யவில்லை. தராசு பதில்களில் கூட இதன் வெற்றிக்கு காரணம் அதன் ஹாலிவுட் மேக்-அப்மேன் மைக்கேல் வெஸ்ட்மோர்தான் என்று குறிப்பிட்டிருந்தது. டைம்ஸ் பத்திரிகையில் இக்பால் மஸீத், படத்தை லேசாக சிலாகித்துவிட்டு, கடுமையாக விமர்சித்திருந்தார். இதே போக்கில்தான் (கொஞ்சம் பாராட்டு நிறைய திட்டு) குமுதம், ஆனந்தவிகடன் போன்ற பத்திரிகைகளும் எழுதியிருந்தார்கள்.

டைரக்டர் சங்கர் அவருக்கே உரிய சிறுவனின் ஆர்வத்துடன் என்னைக் கேட்டார். 'ஏன் சார் சாதாரண படங்களையெல்லாம் மன்னிச்சு நிறைய மார்க் கொடுக்கறாங்க; இதை மட்டும் கடுமையா தாக்கறாங்க?' என.

அதற்குக் காரணம், படத்துடன் சம்பந்தப்பட்டவர்களின் பிரபலம் என்பதை அறிந்து கொள்ள இன்னும் அவருக்கு வயசாக வேண்டும்.

இத்தனையையும் மீறி இந்தப் படம் அவர்கள் பாஷையில் ஒரு 'மெகா ஹிட்' ஆனதற்கான காரணத்தை, உணர்ச்சிவசப்படாமல், ஆக்கியவர்களின் பிரபலங்களையெல்லாம் மறந்து யோசித்தால், இந்திய சினிமாவின் அனாடமி கொஞ்சம் புரியும். இந்தியன் படத்தில் காட்டப்பட்ட லஞ்சம் எல்லாருக்கும் பழக்கப்பட்ட லஞ்சம். நம்மில் அனைவரும் ஏதாவது ஒருநாள் ஆர்.டி.ஓ ஆபீசுக்கோ சப்-ட்ரெஷரிக்கோ போயிருக்கிறோம். போக்குவரத்து கான்ஸ்டபிள்களால் நிறுத்தப்பட்டிருக்கிறோம். மந்திரிகளின் லஞ்சம் செத்த பாம்பான பின், அதிகாரிகளின் லஞ்சம் அதன் பரிச்சய முகத்தினால், மிகையாக சித்திரித்தாலும் உடனே ரசிக்கப்பட்டது. மேலும் எல்லோருக்கும் லஞ்சாதிகாரிகளை குத்திக் கொல்லும் நிறைவேறாத இச்சை இருக்கிறது. அதை தாத்தா நிறைவேற்றுகிறார்.

கதையை நான் சங்கருடன் விவாதித்தபோது இது 'ஓப்பன் சஸ்பென்ஸ்' வகையைச் சேர்ந்தது; தாத்தாதான் கொல்கிறார் என்பது எல்லாருக்கும் தெரியும்; எப்படி எப்போது மாட்டப்போகிறார், மகனை என்ன செய்யப் போகிறார்' என்கிற சஸ்பென்ஸ் சரடை விடாமல் தொடரும் போது, இடைக்கால மனிஷா, ஊர்மிளா, கவுண்டமணி, செந்தில் எல்லாம் தாங்கும் என்றதை சங்கர் உடனே பிடித்துக் கொண்டுவிட்டார்.

கமல்ஹாசன் ஒவ்வொரு படத்திலும் ஏதாவது வித்தியாசமாகச் செய்வதை எல்லாரும் எதிர்பார்க்கிறார்கள். அந்த இச்சையை இந்தப படம் அந்த மேக்-அப் மூலம் நிறைவேற்றியது. ஆனால் மேக்-அப் மட்டும் போதாது; அதைப் போட்டுக் கொண்டு நடிக்கவும் வேண்டும் என்பதை 'தராசு' உணராதவர் அல்ல. மற்றொரு முக்கிய காரணம், மிகவும் 'ரிஸ்க்' எடுத்துக் கொண்டு குழுவின் மேல் நம்பிக்கை கொண்டு எண்ணற்ற இடையூறுகளுக்கிடையே தாராளமாகச் செலவழித்த தயாரிப்பாளர் ரத்தினத்தின் பொறுமை. DTS, ரஹ்மானின் அக்கடா துக்கடாவெல்லாம் அலங்காரங்கள். கதையில் ஒரு பார்வையாளர் பங்கீடு இருந்ததால்தான் வெற்றி பெற்றது. இந்த உத்தி, நாடகம், நாவல் அனைத்துக்கும் முக்கியமான தேவை. எதிர்பார்த்தது நடக்கும் போது கதையில் தாமும் பங்கு பெற்ற திருப்தி அவர்களுக்கு ஏற்படுகிறது. உதாரணமாக தாத்தா அந்த பெல்ட்டை ரிபேருக்குக் கொடுக்கும் போது அதை வைத்து கண்டு பிடிக்கப் போகிறார்கள் என்பதை எதிர்பார்ப்பார்கள். இந்தக் காட்சி பின்னர் வரும் போது மனத்தில் ஒரு முழுமை ஏற்படுகிறது.

சங்கரின் படங்கள் வெற்றி பெறப் பெற அவர் தன்னம்பிக்கை அதிகமானாலும் பயமும் அதிகமாகிறது. அது தேவையில்லை. சங்கர் இப்போது சினிமா பரிபாஷையில் ஒரு 'எம்ஜி' ஆகிவிட்டார்.

கமல் அடுத்த படத்தில் மாமியாக வருகிறார். அந்த மேக்கப்பை பார்த்தபோது, 'இனி என்னதான் செய்யப் போகிறார்?' என்று யோசிக்க வைக்கிறது. ஐயர் கட்டும், கண்ணாடியும் மைலாப்பூரும் லேசான செக்ஷுவாலிட்டியும் கவனித்ததில், "கமல் ஒவ்வொரு படத்திலேயும் ஏதாவது விநோதமாகச் செய்கிற சிண்ட்ரோமிலிருந்து நீங்கள் தப்பிக்க வேண்டும்" என்றேன்.

பத்திரிகை விமர்சனங்கள் ஒருபடத்தின் வெற்றியையோ வீழ்ச்சியையோ பாதிப்பதில்லை.

காரணம் பத்திரிகை படிப்பவர்கள் மிஞ்சி மிஞ்சி பத்து லட்சம் பேர். தமிழ்நாட்டின் ஜனத்தொகை ஐந்து கோடி.

(மீண்டும் அடுத்த வாரம்)

# விஷ்வக்சேனன்

## 36. விதியா? வெற்றித் தேவதையா?

திரேதாயுகத்திலும், துவாபர யுகத்திலும் வீரர்கள் நாகாஸ்திரம், மோகனாஸ்திரம் என்று பல மந்திர அஸ்திரங்களைப் பிரயோகித்ததாகவும், அவை எதிரிகளை அசையவொட்டாமல் அடித்து, நினைவிழக்க வைத்ததாகவும் புராணங்கள் கூறுகின்றன. கண்டகோபாலனது அவையில் யுவான் கூறிய வார்த்தைகள் அத்தகைய ஒரு அஸ்திரத்தின் விளைவை ஏற்படுத்தின.

சோழ தூதனாக வந்தவன் உண்மையில் பாண்டிய இளவல் என்று கேட்டதும், கண்டகோபாலன் சித்தத்தில் ஆதித்யனின் விளையாட்டுப் பிள்ளை போன்ற முகமும், அவனைத் தன் மகள் ஸ்வர்ணமுகியுடன் பழக அனுமதித்ததும் நினைவில் எழுந்தன. அவையிலிருந்தவர்களும் திகைப்பில் உறைந்து போய்க் கிடந்தார்கள்.

கோட்டைக்கு வெளியே எழுந்த பெரும் கூச்சல், அவர்களின் பிரமையை நீக்கி, அவர்களை திகைப்பிலிருந்து விடுபடச் செய்தது. தொடர்ந்து அத்தாணி மண்டபத்தினுள் உபதலைவன் ஒருவன் அவசரமாக நுழைந்தான். மன்னனை வணங்கவும் மறந்தவன், "பிரபு, வடக்கு வாயிலில் மன்மசித்தன் படைகள் அணிவகுத்து நிற்கின்றன. இன்னும் ஒரு நாழிகையில் தாக்குதலைத் தொடங்குவதாகவும் அறிவித்திருக்கிறான்" என்றான் பதற்றம் நிறைந்த குரலில்.

அவன் வார்த்தைகளை முடிக்குமுன்னர் கண்டகோபாலன் எழுந்தே விட்டான். அவன் முகத்தில் உக்கிரம் பொங்கியது. யுவானை எரித்து விடுபவன் போல பார்த்தவன், "பாண்டிய தூதனே, பாண்டியர் படையையும் இந்த மன்மசித்தனையும் கூட ஒடுக்கும் வல்லமை எமக்கு உண்டு. பொறுத்துப் பார்" என்றான். காவலரை நோக்கி, "இவனைக் காவலில் வையுங்கள்" என்றும் உத்தரவிட்டு வெளியேறினான்.

அணிவகுத்திருந்த புரவி வீரர்களினூடே கண்டகோபாலன் வேகமாக நடந்து, வடக்கு வாயிலை நெருங்க நெருங்க, கோட்டைக் கதவுகளைப் பெரும் மரங்கள் கொண்டு தடார் தடாரென்று மோதும் ஒலி அவன் செவிகளைத் தாக்கியது. கோட்டையின் உட்புறத்து வளைவுகளையும் நிறுத்தப்பட்டிருந்த சுழற்பொறிகளையும் தயாராக நின்ற வீரர்களையும் உயரே மாடங்களில் தலை நீட்டிக் கொண்டிருந்த அம்புகளையும், யந்திரங்களையும் கவனித்து, சற்று அலட்சியமாகவே கோட்டையின் உச்சியை நோக்கிச் சென்ற படிகளில் ஏறினான்.

கோட்டையின் உச்சிக்கு வந்தவனுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. அவன் எதிர்பார்த்ததைப் போல இருமடங்கு வீரர்கள் மன்மசித்தனின் பின்னால் அணிவகுத்திருந்தனர். பின் பகுதியில் நின்றவர்கள் காகதீய மன்னனின் வீரர்கள் என்பதைப் புரிந்து கொள்ள அதிக நேரமாகவில்லை கண்டகோபாலனுக்கு. தன்னை அகற்ற காகதீய மன்னன் தீர்மானித்து விட்டதாக யுவான் கூறிய வார்த்தைகள் வந்து மீண்டும் அவன் செவிகளில் மோதின. தொடர்ந்து காகதீய மன்னனே வரக்கூடும் என்ற எண்ணம் எழுந்து, அவனைச் சற்று நேரம் திக்பிரமையில் ஆழ்த்தவும் செய்தது.

அவன் பிரமை நீங்குமுன்பாக கோட்டைக் கதவும் பெயர்ந்து பெரும் ஒலியுடன் உட்புறமாக விழுந்து நொறுங்கியது. தொடர்ந்து மன்மசித்தன் உயர்த்திய வாளுடனும், முகத்தில் உக்கிரத்துடனும் வீரர்கள் பின் தொடர கோட்டைக்குள் வேகமாகத் தனது புரவியைப் பாயவிட்டான்.

தமிழகத்திலேயே மிகப் பழைமையானதும், பல்லவராலும், சோழ மன்னராலும் பராமரிக்கப்பட்டதுமான அந்தக் காஞ்சிமா நகரம், எதிரிகளின் தாக்குதல்களை எத்தனை தூரம் எதிர்கொள்ள முடியும் என்பதை, அன்று கண்ணெதிரில் கண்டான் கண்டகோபாலன். அதிர்ச்சியினாலும், மன்மசித்தனின் ஆரம்ப வேகத்தினாலும் சற்றுத் தடுமாறினாலும், பிறகு சுதாரித்துக் கொண்ட கோட்டைத் தலைவன், அணிவகுப்பை இறுக்கி வழியை மறிக்கச் செய்தான். மேலிருந்து அம்புகளை மழையாகப் பொழிய விட்டும், பக்கவாட்டு யந்திரங்களைச்



சரமாரியாக இயக்க உத்தரவிட்டும் வீரர்களை ஸ்திரமாக நின்று போராட வைத்தும், உள்ளே நுழைய முயன்றவர்களைத் தடுத்தான். முதலில் மன்மசித்தனுடன் நுழைந்து விட்ட வீரர்களைத் தவிர்த்து, அவன் படைப் பிரிவு கோட்டை வாயிலைத் தாண்ட இயலாமல் தவித்தது.

பெரும் வேகத்துடனும் ஆத்திரத்துடனும் வாளை வீசியபடியே முதன் முறையாக காஞ்சிக்குள் பிரவேசித்துவிட்ட மன்மசித்தன், காஞ்சிக் கோட்டைக்குள் சோழ மன்னர்கள் செய்து வைத்திருந்த பாதுகாப்பு ஏற்பாடுகள் எத்தனை வலுவானவை என்பதைப் புரிந்து கொண்டான். வளைவுகளில் எதிர் கொண்ட சுழற் பொறிகளாலும், பக்கவாட்டில் தாக்கிய வீரர்களாலும் தனது வீரர்களில் பாதிக்கு மேல் அழிந்து விட்டதை உணர்ந்தான். இருப்பினும் பின்னால் பெரும் எண்ணிக்கையிலிருந்த தனது படையை எண்ணியவன், இயற்கையான முரட்டு சுபாவத்தால் திரும்பியும் பாராமல் அரண்மனையை நோக்கி, வீரர்கள் பின் தொடரப் பாய்ந்து கொண்டிருந்தான். அரண்மனையின் வீரர்களுடன் தனது வீரர்களைக் கலக்க விட்டவன், உருவிய வாளுடனும், குருதி படிந்த உடையுடனும் உள்ளே நுழைந்து, கண்டகோபாலனைத் தேட ஆரம்பித்தான். ஆத்திரத்துடன் தேடியவன் விழிகளில் அந்த

## அருள் வாக்கு

'நீ எப்படி விட்டாயோ அப்படி ஆகட்டும்' என்று சரணாகதி செய்வது தான் பக்தி. தனக்கு என்று எதுவுமே இல்லாவிட்டால் மனசின் அழுக்குகள் நீங்கி, அது கண்ணாடி மாதிரி சுத்தமாக இருக்கும். அப்போது நிறைந்த ஆனந்த மாக இருக்கலாம். 'எனக்கு என்று ஒன்று மில்லை' என்று யாரிடம் சரணாகதி செய்து விட்டாலும் - ஒரு பதியிடம் பத்தினி சர ணாகதி செய்தாலும் (அவன் தூர்த்தனான பதியாகக் கூட இருக்கலாம்); ஒரு குரு விடம் சிஷ்யன் சரணாகதி செய்தாலும் (அந்த குரு போலியாக இருந்தால் கூடச் சரி) - அப்புறம் நிச்சிந்தைதான்; அதன் முடிவான பலனாக மோக்ஷம்தான். ஆனால் ஏதோ புராணங் களில் இப்படிப் பதியிடம், ஆசாரியனிடம் சரணா கதி செய்தே தெய்வமாகி விட்டவர்களைப் பற்றிச் சொல்லியிருந்தாலும், பிரத்தியட்சத்தில் இப்படி நம் மாதிரி குற்றம் குறை இருக்கக் கூடிய ஒரு மனுஷ்ய னிடம் சரணாகதி பண்ணுவது என்றால் முடியத்தான் இல்லை. இப்படிப்பட்ட லாயக்குள்ளவன் என்று தோன்றுகிற குரு கிடைத்து, அவரிடம் சரணாகதி செய்து விட்டால் அப்புறம் ஸ்வாமி கூட வேண்டாம் தான். ஆனால் வாஸ்தவத்தில், நிஜமாகவே திரிபுவ னங்களுக்கும் யஜமானனாக, எல்லாம் தன் சொத் தாகக் கொண்டுள்ள ஸ்வாமியிடம்தான், நம்மால் கொஞ்சத்தில் கொஞ்சமாவது, 'எல்லாம் உன் உடை

சிற்ப மண்டபம் தென்பட்டது. உள்ளே காவ லர்கள் உதவியுடன் இளவரசி ஸ்வர்ணமுகி சிற்பங்களையும் சித்திரங்களையும் பெரும் பேழைகளில் அடுக்கி, பாதுகாக்க முற்பட்டுக் கொண்டிருந்தாள். தன் வீரர்களை அழைத்த படியே உள்ளே நுழைந்தவன், "உயிரின் மீது ஆசையிருப்பவர் எவரும் அசைய வேண்டாம்" என்று இரைந்தான்.

ஸ்வர்ணமுகியும் காவலர்களும் ஸ்தம்பித்து நிற்க, மீண்டும் அவன் குரல் பலமாக இரைந்து ஒலித்தது. "எங்கே அந்தச் சித்திரம்?" என்று... காவலர்களும் மன்மசித்தன் வீரர்களும் ஒரு வரையொருவர் வெறித்தபடி போரிடத் தயாராக நிற்க, ஸ்வர்ணமுகியின் விழிகளில் திகில் பரவிக் கிடக்க, மன்மசித்தனின் விழிகள் மண்டபத்திலிருந்த சிற்பங்களைத் தாண்டி சித்திரங்களிருந்த பகுதியில் அலை பாய்ந்தன. இறுதியாக அவை ஓரிடத்தில் நிலைக்கவும் செய்தன. பொத்தப்பி மன்னர்கள் வணங்கி மண்டியிட, கண்டகோபாலன் அவர்களின் முடி மீது கால் வைத்து கம்பீரமாக நிற்கும் அந்தச் சித்திரம் அவன் விழிகளில் பட்டு சிவப் பேற வைத்தது.

கனல் கக்கும் விழிகளை ஸ்வர்ணமுகியின் மீது திருப்பியவன் குரலில் ஆத்திரம் வெடித் தது. "இவற்றைத் தீட்டியது நீதானா?" என்று இரைந்தான் அவன். எந்த பதிலும் கூறாமல் அவள் திகைப்பதைக் கண்டவன், அடுத்து தன் வீரர்களை நோக்கி, "அவள் கரங்களைத் துண் டித்து விடுங்கள்" என்று உத்தரவிட்டான். ஒரு கணமே தயங்கிய மன்மசித்தனின் வீரர்கள் உருவிய வாட்களுடன் மூர்க்கமாக ஸ்வர்ண முகியை நெருங்கினர்.

பெண்களையும், அந்தணர்களையும், ஆயுதமிழந்து புறமுதுகிட்டு ஓடுபவர்களையும், சரணடைந்தவர்களையும் தாக்குவது பெரும் பாவம் என்றும், அவை வீரனாயிருப்பவனுக்கு அபவாதத்தை ஏற்படுத்துபவை என்றும் நீதி வாசகம் என்னும் வடமொழி நூல் கூறுகிறது. களவழியைப் பற்றிக் கூறும் தமிழ் நூல்களும் இன்னும் இதை விவரித்துக் கூறுகின்றன. நீதியையோ, தர்மத்தையோ எண்ணிப் பார்க்க ஆத்திரம் இடம் தராததால், பொத்தப்பி மன்னன் அந்த சிற்ப மண்டபத்தில் இட்ட கட் டளை, வீரர்களை சற்று திகைக்க வைத்தது. எனினும் மண்டபச் சுவர்களில் இரண்டு மூன்றுமுறை எதிரொலித்து மீண்டும் மீண்டும் அவன் குரல் ஒலிக்கவே, ஸ்வர்ணமுகியின் கரங் களைத் துண்டித்து விட வேகமாக நெருங்கி னார்கள் பொத்தப்பி வீரர்கள்! அவன் உத்தர வைக் கேட்ட ஸ்வர்ணமுகியும் காவலரும், 'இப் படியும் கூட ஒரு மனிதன் இருக்க முடியுமா' என்று திகைத்தாலும், நெருங்க முற்பட்ட வீரர் களைக் கண்டு வாட்களை உருவிக் கொண்டு முன்னால் பாய்ந்தார்கள்.

ஆனால் வாட்கள் மோதுவதற்கு முன் பாகவே மன்மசித்தனும், ஸ்வர்ணமுகியும், வீரர் களும் எதிர்பாராத விதமாக, மண்டபத்தின் மூலையிலிருந்த பெரும் கதவுகள் தடாரென்ற ஒலியுடன் மோதித் திறந்தன. அந்தக் கதவு களின் வழியே அந்தப்புரத்தை அடைந்து விடலாமென்ற எண்ணத்தில் நகரமுயன்ற ஸ்வர்ணமுகி, அந்த வாயிலில் திடீரென சீனத்து வாலிபன் ஒருவன் தோன்றியதையும், உடன் பாண்டியர் சின்னங்களை அணிந்த வீரர் நால்வர் நுழைந்ததையும் கண்டு திகைத் தாள்.

இரு பக்கத்து வீரர்களும் தயங்கி நிற்க மன்மசித்தன் குரல் பலமாக எழுந்தது. "யார் நீ?" என்று.

அந்த சீனத்து வாலிபன் பதிலேதும் அளிக் கவோ, வெறும் வார்த்தையாடிக் கொண்டு நிற் கவோ அடியோடு விரும்பவில்லை என்பது தெரிந்தது. அந்த அறையிலிருந்தவர்கள் எதிர் பார்க்காத ஒரு வேகத்தில் தோளின் பின்னா லிருந்து தலை நீட்டிய அந்த சீனத்து வாளை உருவினான் அவன். ஒரே பாய்ச்சலில் பொத்

மையே, எனக்கென்று ஒன்றுமில்லை' என்று சரணாகதி செய்து, அதனால் நிம்மதி பெற முடிகிறது.

பக்தி செய்வதற்கு இன்னொரு முக்கியமான காரணம்: அன்பு செலுத்தாமல் வாழ்ந்தால் அதில் ஆனந்தமே இல்லை. அன்பிலே உள்ள ஆனந்தம் வேறெதிலும் இல்லை என்று அநுபவத்தில் தெரிகிறது. ஆனால் நாம் யாரிடம் அன்பு வைத்தாலும், என்றோ ஒரு நாள், ஒன்று நாம் அவரை விட்டுப் பிரிகிறோம்; இல்லாவிட்டால் அவர் நம்மை விட்டுப் பிரிகிறார். ஆனந்த ஹேதுவாக இருந்த அன்பு அத்தனையும் அழுகை மயமாகி விடுகிறது. நம்மை விட்டுப் பிரியாத ஒரே சாசுவத வஸ்து ஈசுவரன்



தான். அவனிடம் அன்பு வைத்து விட்டால்? இந்த அன்பு என்றும் சாசுவதமாக ஆனந்தம் தந்து கொண்டே இருக்கும். இந்த அன்பு முற்றுகிற போது யாவுமே அவனாகத் தெரியும். ஒன்றிடம் அன்பு-அது காரணமாகவே இன்னொன்றிடம் துவேஷம் என்றில்லாமல், எல்லாம் அவனானதால் எல்லாவற்றிடமும் ஏற்றத் தாழ்வில்லாமல் அன்பாக இருப்போம். அன்பற்ற வாழ்வு வாழ்ந்து மநுஷ்ய ஜன்மாவை விருதாவாக்கிக் கொள்ளாமல் இருக்க பக்தியே உதவுகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

தப்பி வீரர்களின் முன்னால் வந்து நின்றவனின் வாள் அவன் கரத்துடன் இணைந்து உட்புறமாக மடிந்து நின்றது. அடுத்த கணம் கரக்ர வென அசுர வேகத்தில் சுழன்று, பொத்தப்பியின் வீரர்களைத் தாக்கத் தொடங்கியது அந்த வாள்!

முன்னணியில் வந்த பொத்தப்பியின் வீரர்களை மூவராகவும் நால்வராகவும் எதிர்கொண்ட யுவானின் வாள், எதிர்ப்புறமாகச் சுழன்று, நேரிடையாகப் பாய்ந்து, வரிசையாக வீரர்களின் மணிக் கட்டிலும், முழங்கையிலும், தோளிலும் தாக்கி மீண்டுவிட்டதால் மூன்று வீரர்களும் கரங்களைப் பிடித்துக் கொண்டு அலறினர்.

யுவானின் சைகையைத் தொடர்ந்து முன்னால் வந்துவிட்ட பாண்டிய வீரர்கள், தாங்கள் பெற்றிருக்கும் பயிற்சி எத்தனை அசாதாரணமானது என்பதை வாட்களை உருவிக் கொண்டு நிரூபிக்கத் தொடங்கினார்கள். ஸ்வர்ணமுகியின் காவலர்களுக்கும் அந்த வீரர்களின் வேகம் துணிவை அளித்துவிட்டதால் அவர்களும் பொத்தப்பி வீரர்களைத் தாக்கத் தொடங்கினார்கள்.

வாளின் சுழற்சியை சற்று மட்டுப்படுத்திக் கொண்ட யுவான், ஸ்வர்ணமுகியை நெருங்கி சீனத்துப் பாணியில் தலையைத் தாழ்த்தினான். "இளவரசி, அஞ்ச வேண்டாம். நீங்கள் அந்தப்புரத்திற்குச் செல்லுங்கள்" என்றும் கூறினான்.

"நீங்கள்... நீங்கள் யாரென்பது... அந்தப் பதக்கம்..." ஸ்வர்ணமுகியின் திகைப்பு குரலிலும், யுவானின் கழுத்தில் ஊசலாடிய பதக்கத்தை வெறித்த விழிகளிலும் தெரிந்தது.

"நான் பாண்டியர் தூதன். பெயர் யுவான். காஞ்சியையும் உங்கள் தந்தையையும் காக்கத் தூது வந்தவன். ஆனால் உங்கள் தந்தை ஏற்க மறுத்து என்னைச் சிறை செய்யவும் உத்தரவிட்டார். தப்பி வந்தவன் உங்களுக்கு உதவ முடிந்தது. தாங்கள் உள்ளே சென்று விடுங்கள்" என்றான் யுவான். அவன் சிறுவிழிகள் தன்னை நெருங்க முயன்று கொண்டிருந்த மன்மசித்தன் மீது பதிந்து கிடந்தன.

ஸ்வர்ணமுகியின் சித்தத்தில் யுவான் என்ற சொல்லைத் தவிர வேறு எதுவும் பதியவில்லை. சோழ தூதர் கூறிய சீனத்துச் சிற்பி இவன்தானென்பதைப் புரிந்து கொண்டவள், சில தினங்களில் யுவான் அங்கு வருவான் என்று தூதர் கூறியதையும் நினைத்துக் கொண்டாள். "சிற்பம் செதுக்குவதாகக் கூறப்பட்ட கரங்கள் இத்தனை லாகவமாக வாளைச் சுழற்ற இயலுமா?" என்ற வியப்பு அவள் சித்தத்தை ஆக்கிரமித்திருந்தது.

மன்மசித்தன் மிக நெருக்கத்தில் வந்து விட்டிருந்தான். "இளவரசி, சீக்கிரம் உள்ளே சென்று விடுங்கள்" என்ற யுவானின் வாள் உயர்ந்து மன்மசித்தனைத் தடுத்தது. வாட்கள் உரசியதும் யுவானின் கவனம் இளவரசியை விடுத்து, முழுவதுமாக மன்மசித்தனின் மீது திரும்பியது.

மன்மசித்தனின் உயர்ந்த ஆகிருதியையும், முழுபலத்துடன் வீசிய அவன் கனத்த வாளின் தாக்குதலையும் இரண்டு மூன்று கணங்களுக்கு கவனித்த யுவான், தீப்பொறி பறக்க வீர பாண்டியன் கற்பித்திருந்த முறையில் தனது வாள் வீச்சை மாற்றிக் கொண்டான்.

யுவானின் மெலிந்த உடலையும் கரங்களையும் கண்டு, அதிக நேரம் அவனால் தாக்குப் பிடிக்க இயலாது என்று குறைத்து மதிப்பிட்டிருந்தான். ஆனால் தனது வாளின் அதிகப்படியான கனத்தையே சாதகமாக்கிக் கொண்ட அந்த சீனத்து வாள், பலதிசைகளிலும் திருப்பி அவனை அலைய விடுவதையும், முகத்தின் அருகிலும் கண்களுக்கு அருகிலும் அதன் வளைந்த முனை அடிக்கடி தோன்றி மறைவதையும் கண்டு வியப்பின் வசப்பட்டான். அடுத்த சில கணங்களில் அந்த வியப்பு திகிலாக உருவெடுத்தது. அனாயாசமாகச் சுழன்ற சீனத்து வாளின் வேகம் திடீரென்று இருமடங்காக அதிகரித்தது. அவனைச் சுற்றி பலவாட்கள் சுழல்வது போன்ற பிரமையை ஏற்படுத்தி,



மனைவி : பையனுக்கு கணக்கு சொல்லிக் கொடுக்காதீங்க...ன்னு சொன்னா கேட்டீங்களா?"

கணவன் : ஏன்?

மனைவி : உங்களைஅடிக்க பையன் டீச்சரைக் கூட்டிட்டு வந்திட்டான்!

— தேனி எஸ். மாரியப்பன்

அவனைப் பின்னடையவும் வைத்தது.

ஸ்வர்ணமுகியின் காவலர்களிருந்த பகுதியை நோக்கி மன்மசித்தனை நெருக்கியது மட்டுமின்றி, திடீரென அவன் வாளின் பிடிக்குள்ளும் நுழைந்து எதிர்ப்புறமாகக் கரத்தை முறுக்கியது சீனத்து வாள். மன்மசித்தனின் கரத்திலிருந்த வாளைப் பிடுங்கி மேலே பறக்க விட்டது!

யுவானின் வலதுகால் உயர்ந்து, மன்மசித்தனைத் தாக்கி, காவலர்களின் நடுவே தடுமாறியபடியே சென்று விழவும் வைத்தது!

மன்மசித்தன் கரங்களைப் பின்புறமாக அசையவொட்டாமல் பிடித்து நிறுத்திக் கொண்டார்கள் காவலர்கள். அவன் மடக்கப்பட்டுவிட்டதைக் கண்டு திகைத்தனர் அவனது வீரர்கள். இதையெல்லாம் ஒருமுறை வெறித்த யுவானின் வாள் மற்ற பாண்டிய வீரர்களுக்கு சமிக்ஞை செய்துவிட்டு, மேலே உயர்ந்து, சட்டென்று இறங்கி, தனது உறைக்குள் சென்று பதுங்கியது.

மன்மசித்தனையும் அவன் வீரர்களையும் சூழ்ந்து கொண்ட காவலர்கள், அனைவரையும் வெளியே இழுத்துச் செல்ல ஆரம்பித்த போது, அரண்மனை நோக்கி கண்டகோபாலன் வீரர்களுடன் வந்தான். அடுத்த இரு நாழிகை நேரத்தில் மன்மசித்தனும் அவன் வீரர்களும் காஞ்சியின் சிறைக்கு இழுத்துச் செல்லப்பட்டனர்.

வெளியில் நடப்பவற்றை மண்டபத்திலிருந்தபடியே கவனித்துக் கொண்டிருந்த யுவான் திரும்பிய போது, இளவரசி இன்னும் அங்கேயே நிற்பதையும் அவள் விழிகள் தன்னையே உற்று நோக்கிக் கொண்டிருப்பதையும் கவனித்தான். மற்ற காவலரும் இளவரசியின் உத்தரவுக்காகக் காத்திருப்பதைக் கண்டவன், வேகமாக அவளை நெருங்கி, "இளவரசி, தங்களைக் காக்க சந்தர்ப்பம் அளித்ததற்கு நன்றி. நான் வருகிறேன்" என்று வணங்கி விட்டுத் திரும்பி, பக்கவாட்டு வாசல் வழியே பாண்டிய வீரர்கள் பின் தொடர வெளியேறினான்.

அவனைத் தடுக்கச் சக்தியற்ற காவலரும், ஸ்வர்ணமுகியும் வெறித்த பார்வைகளுடன் நிற்க, தெற்கு வாயிலை நோக்கி யுவான் விரைவது தெரிந்தது. ஸ்வர்ணமுகியின் உள்ளத்தில், தான் பிரவேசித்து விட்டதை உணராத யுவான், தெற்கு வாயில் வீரர்களை அனாயாசமாக விலக்கியபடி கோட்டையை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தான்.

காஞ்சியின் சிற்ப மண்டபத்தில் புதிதாக வடிக்கப்பட்ட தந்தச் சிற்பமாகவே நின்று கொண்டிருந்தாள் ஸ்வர்ணமுகி. காவலர்கள் வெளியேறிய பின்பும், பணிப் பெண்கள் வந்து அழைத்த பின்பும் கூட அவள் அந்தப்புரம் செல்வதற்கு மனமின்றி, அந்தக் கடல் நாகச் சிற்பத்தையே வெறித்துக் கொண்டு நின்றாள். என்னவென்று விளங்காத உணர்ச்சிகள் அவள் மனத்தை ஆட்டுவித்துக் கொண்டிருந்தன.

மன்மசித்தன் சிறைப்பட்ட செய்தி பரவி விட்டதால், தாக்குதலின் வேகத்தை முழுவதுமாக இழந்துவிட்ட அவன் வீரர்களை, அரண்மனைக் காவலர்களைக் கொண்டே மடக்கினான் கண்டகோபாலன். கோட்டைக்கு வெளியேயிருந்த பொத்தப்பி வீரர்களை அடக்க அவன் அதிக சிரமம் எடுத்துக் கொள்ளவில்லை. பின்பகுதியிலிருந்த காகதீய வீரர்களும் இனித் தொடர்ந்து தாக்குவதில் எந்தப் பயனுமில்லையென்பதை உணர்ந்து கொண்டதால், மெள்ள, பின் வாங்கி தங்கள் மன்னனிருந்த காளத்தியை நோக்கி விரைய ஆரம்பித்தனர்.

வெற்றி அளித்துவிட்ட போதை தலைக்கேறிவிட, நிதானத்தை அறவே இழந்துவிட்டான் கண்டகோபாலன். அரண்மனைக் காவலர் தலைவன், இரண்டாவது முறையாக மன்மசித்தன் சிறைப்படுத்தப்பட்ட சம்பவத்தையும், யுவான் தப்பியதையும் பற்றிக் கூறிய பிறகே சற்று நிதானித்தான். பாண்டியர் தூதனாக வந்த அந்த சீனத்து வாலிபன் எச்சரித்தபடி, மன்மசித்தனைத் தொடர்ந்து காகதீய மன்னன் படைகளுடன் வரக்கூடும் என்ற எண்ணம் எழுந்ததும், அவன் போதை சற்றுக் குறையவும் செய்தது. எதற்கும் மன்மசித்தனை விசாரித்து விடுவது என்று தீர்மானித்தவன், சிறைச்சாலையை நோக்கி விடுவிடுவென்று நடந்தான். சிறைக் கம்பிகளுக்குப் பின்னால் நின்ற மன்மசித்தனைக் காணக் காண மீண்டும் அவன் நிதானம் மறையத் தொடங்கியது!

அடுத்து மன்மசித்தன் கூறிய விவரங்கள் அவன் சித்தத்தைப் பெரும் குழப்பத்திலாழ்த்தவும் செய்தன. தன்னைப் பார்த்து நகைப்பது வெற்றித் தேவதையா அல்லது விதியா என்பது புரியாமல் விழிக்க ஆரம்பித்தான் கண்டகோபாலன்.

(தொடரும்)

# மற்றுமொரு சவால்! பொருளாதாரப் பெருக்கத்தில் முயல்!!

பார்ப்பதற்கு அழகானதும் ரம்மியமானதுமான சிறு முயலை இறைவன் படைத்தான். ஆமை முயலுக்கு சவால் விட்டபோது உலக பொருளாதாரம் மிகவும் பின்தங்கிய நிலையிலேயே இருந்தது. இன்று பலமுனைகளில் உலக பொருளாதாரம் வளர்ச்சியடைந்து வரும் நிலையில் முயலும் உலக பொருளாதார வளர்ச்சியிலும் தனிமனித பொருளாதார வளர்ச்சியலும் தன் பங்களிப்பை சிறந்த முறையில் செய்து வருகின்றது. தனிமனித பொருளாதார வளர்ச்சியில் "அங்கோராஸ் அக்ரோ பிரைவேட் லிமிடெட்" என்ற நிறுவனம் கீழ்காணும் திட்டத்தின் மூலம்தன பங்களிப்பை செய்து வருகின்றது.

| திட்டம் | | | | | 2-ம் வருட முடிவில் இடைக்கால வருமானம் | | 5-ம் வருட முடிவில் இறுதி வருமானம் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| திட்டம் | யூனிட்டுகளின் எண்ணிக்கை | முதலீடு | 5 வருடத்திற்கு உத்திரவாதம் படுத்தப்பட்ட வருமானம் | வருடங்களுக்குப் பிறகு திரும்ப கிடைக்கும் முதலீடு | முயல்கள் எண்ணிக்கை | எதிர் பார்க்கப் படும் வருமானம் | முயல்கள் எண்ணிக்கை | எதிர் பார்க்கப் படும் வருமானம் |
| A | 1 | 5000 | 1050 | 5000 | 50 | 5000 | 150 | 15000 |
| B | 5 | 25000 | 5250 | 25000 | 250 | 25000 | 800 | 80000 |
| C | 10 | 50000 | 10500 | 50000 | 600 | 60000 | 1750 | 175000 |
| D | 20 | 100000 | 21000 | 100000 | 1250 | 125000 | 3600 | 360000 |
| Mini Giant | | 2000 | 420 | 2000 | 20 | 2000 | 60 | 6000 |

## சிறப்பு அம்சங்கள்

- மிகக் குறைந்த முதலீடு ரூ. 5000/- (மினிஜயன்ட் ரூ. 2000/-)
- உத்தரவாதமிட்ட 21% வருட வருமானம் பின்தேதியிட்ட காசோலைகளாக (5 வருடத்திற்கு)
- 5 வருட இறுதியில் பின்தேதியிட்ட காசோலையாக திரும்ப கிடைக்கும் முதலீடு.
- 2-ம் வருட முடிவில் இடைக்கால வருமானம் 50 முயல்கள் (ரூ. 5000/- கணக்கிடப்பட்டது) 5-ம் வருட முடிவில் இறுதி வருமானம் 150 முயல்கள் (ரூ. 15,000/- கணக்கிடப்பட்டது) பின்தேதியிட்ட காசோலைகளாக.
- ஒரு வருட முடிவில் திட்டத்திலிருந்து விடுபடும் வசதி.
- விசா/மாஸ்டர் கார்டுகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

## அங்கோராஸ் பைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்

- மிகக் குறைந்த முதலீடு ரூ. 10,000/- வட்டி 24% வரை. + காப்பீடு + சிறப்பு ஊக்கத் தொகை.




**ANGORAS AGRO PVT. LTD.**
703, Spencer Plaza,
769, Anna Salai,
Madras - 600 002.
Tel : 8522176/8525482
Fax : 044-8522176

**ANGORAS FINANCE & INVESTMENTS**
68, Gandhi Road,
Near National Theatre,
Tambaram West,
Madras - 600 045.

"தேர்தல் தோல்விக்கு சசிகலா காரணமல்ல! அவர் சட்டவிரோதமான அதிகார மையமாகச் செயல்பட்டது கிடையாது. சசிகலாவை என் வீட்டிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்று அடிமட்டத் தொண்டர்கள் யாரும் சொல்லவில்லை! இடைமட்டத் தலைவர்கள் சிலர்தான் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அதை பத்திரிகைகள் பெரிதுபடுத்துகின்றன."

– ஜூலை மாதம் முதல் வாரத்தில் 'இந்து' பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் ஜெ. கூறியதுதான் இது. இப்போது சசிகலாவுடனான தமது தொடர்பை துண்டித்தது மட்டுமல்லாமல், வளர்ப்பு மகனையும் கைகழுவி அறிக்கை வெளியிட்டு, இரண்டே மாதத்தில் அந்தர் பல்டி அடித்திருக்கிறார் ஜெ.

உறவைத் துண்டித்து விட்டதாக ஜெ. விட்ட அறிக்கை, இந்த ஆண்டின் மிகப் பெரிய ஜோக்காக கருதப்படலாம். பொது இடங்களில் இந்த அறிக்கை பற்றி விவாதிப்பவர்கள் விலாநோகச் சிரிக்கிறார்கள். "நமக்கெல்லாம் அந்தம்மா ஐந்து வருஷமாக காதுல பூ வைச்சாங்க. இப்பவும் அந்த வேலையைத் தொடரவாம்னு பார்க்கறாங்க போலிருக்கு" என்று இடித்துக் காட்டுகிறார்கள்.



# அம்மா அடித்த அந்தர் பல்டி!

அம்மாவின் அதிரடி அறிக்கைக்கு அடுத்த நாள் அ.தி.மு.க. தலைமை நிலையத்துக்குச் சென்றிருந்தோம். சுமார் 50, 60 தொண்டர்கள் இருந்தார்கள். அவர்களிடையே எந்தவித உற்சாகமும் இல்லை. மதுசூதனன், தமது லோக்கல் தமிழில் கலக்கிக் கொண்டிருந்தார். "எனக்கு அரசியல் எதுவும் தெரியாது சார். நான் எம்.ஜி.ஆர். ரசிகன். இது எம்.ஜி.ஆர். துவக்கிய கட்சி. தலைவருக்குப் பிறகு அம்மாதான் எல்லாம். அவுங்க பக்கம்தான் நாங்க இருப்போம்" என்று நம்மிடம் சொன்னார் மது. "பெரும்பாலான பொதுக்குழு உறுப்பினர்கள் முத்துசாமி – கண்ணப்பன் அணி பக்கம் போய் விட்டார்கள் போலிருக்கிறதே?" என்றதும் "கண்ணப்பனிடம் ஏராளமாகப் பணம் இருக்கிறது, சில பொதுக் குழு உறுப்பினர்களை வாங்கியிருக்கிறார், அவ்வளவுதான்!" என்றார்.

ஆனால் தொண்டர்கள் மனம் விட்டுப் பேசும்போது, "இந்த அறிக்கையைத் தேர்தல் முடிவுகள் தெரிந்த ஒரு மாதத்திற்குள் விட்டிருந்தால் கட்சி இந்த அளவு டேமேஜ் ஆகி இருக்காது" என்று அபிப்ராயப்பட்டார்கள்.

தோல்விக்கு அப்புறம் நடந்த தொண்டர்கள் சந்திப்பில் கூட பலர் 'சசிகலாதான் தோல்விக்குக் காரணம்' என்று சொன்னதை ஜெ.வால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. பின்னர் தொண்டர்களின் மனநிலையை உணர்ந்து வர மாவட்டங்களுக்கு அனுப்பப்பட்டனர் கே.ஏ.கே., சேடப்பட்டி, காளிமுத்து ஆகியோர். எல்லா இடங்களிலும் சசிக்கு எதிரான கோஷம்தான். இதற்குப் பின்னரும் சசியுடன் உறவைத் துண்டிக்கவில்லை. மாறாக ஜெயிலில் இருந்த சசியை அடிக்கடி சென்று பார்த்து வந்தார்.

அ.தி.மு.க.வின் தேர்தல் தோல்விக்கான காரணங்களை எழுதுமாறு உடன்பிறப்புக்களை கேட்டுக் கொண்டதாகவும், அவர்களனைவரும் ஆச்சர்யப்படத்தக்கவிதத்தில் ஒரே கருத்தையே தெரிவித்து இருக்கிறார்கள் என்றும் அந்தர்பல்டி அறிக்கையில் சொல்லி, தொண்டர்கள் உணர்வுகளுக்கு மதிப்பளிப்பதாக இப்போது ஒரு தோற்றத்தை உருவாக்கியிருக்கிறார் ஜெ.

"இந்தம்மா நியூஸ் பேப்பர் எல்லாம் படிப்பதில்லையா?

தமிழ்நாடெங்கும் சசிகலா குடும்பம் பற்றித்தானே பேசிக் கொண்டிருந்தார்கள். இப்பத்தான் ஏதோ விவரம் புரிந்த மாதிரி அறிக்கை விட்டிருக்கிறார். இது ஏமாத்துவேலை" என்றார் கண்ணப்பன் அணியைச் சேர்ந்த பிரமுகர் ஒருவர்.

முத்துசாமி - கண்ணப்பன் அணி பலமாகி வருகிறது என்று தெரிந்தவுடன்தான் தடாலடியாக மாறினார் ஜெ. ஆனால் கே.ஏ.கே.யோ, "அந்தம்மா தலைமையில் அ.தி.மு.க. ஒரு அரசியல் சக்தியாக இயங்க முடியாது. தோல்விக்கு சசிகலா விவகாரம் மட்டும் காரணமல்ல. வேறு பல காரணங்களும் இருக்கின்றன. சரியான ஆத்ம பரிசோதனை நடைபெறவில்லை. சசிகலாவுடனான உறவை அவ்வளவு சுலபமாக ஜெ. துண்டித்துக் கொள்ள முடியாது. காரணம் அவர்களிடையே பொருளாதாரத் தொடர்பும் இருப்பதுதான். தலைமைப் பொறுப்புக்கு இருக்க வேண்டிய தகுதிகள் கொஞ்சமும் இல்லாதவர் ஜெயலலிதா!" என்று நம்மிடம் சொன்னார்.

"பொதுக்குழு உறுப்பினர்கள் பெரும்பாலும் எங்கள் பக்கம் இருப்பதை உணர்ந்துதான் இந்த அந்தர்பல்டியை அடித்திருக்கிறார் ஜெ. இந்த அறிக்கையை இப்போது விடாமலிருந்தால் தனிமரமாகி இருப்பார். பொதுக்குழுவை கூட்டுவதை அவர் தள்ளி போட்டுக் கொண்டு போவதன் காரணம் அவருக்கு ஆதரவு கிடையாது என்பதுதான். பணத்தை ஏகமாகச் செலவு செய்து அவர்களை வளைத்துப் போடப் பார்க்கிறார். ஆனால் அது நடக்காது" என்று சொல்கிறார் முத்துசாமி அணியைச் சேர்ந்த சைதை துரைசாமி. "1980ம் ஆண்டுதான் கடைசியாக, பொதுக் குழு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க உட்கட்சித் தேர்தல் நடந்தது. கட்சி விவகாரங்களை பொதுக்குழுவில்தான் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பது விதி. கொடி, சின்னம் ஆகியவற்றுக்காக ஜெ. கோர்ட்டுக்குச் சென்றது தவறு" என்றும் சொன்னார் துரைசாமி.



"கட்சிக்கெதிராகத்தான் யாரும் கோர்ட்டுக்குச் செல்லக் கூடாது. இப்போது கட்சியே, பிரிந்து சென்ற சிலரின் நடவடிக்கைகளை எதிர்த்து கோர்ட்டுக்குச் சென்றிருக்கிறது. இது சரிதான்" என்று நம்மிடம் சொன்னார் ஜெ.வுக்கு வேண்டிய சட்ட ஆலோசகர் ஒருவர்.

கட்சித் தலைமை யார் கையில் என்பதைத் தவிர, கோடிக்கணக்கான சொத்துக்களை யார் தக்க வைத்துக் கொள்வது என்பதும் இதிலடங்கியுள்ள முக்கிய மான விவகாரம்!

ஜெ.வைப் பொறுத்த வரை தம்வசம் உள்ள ஆயுதங்களை முழுக்கவும் பயன்படுத்த வேண்டிய நிலையில் இருக்கிறார். கேஸ்-கோர்ட்-கைது என்று சட்டத்தின் கரங்கள் நீளும்போது, கட்சி என்கிற கவசம் தம்மிடம் இருக்க வேண்டும் என்று முனைப்புடன் இருக்கிறார். இதற்காக எல்லா விதத்திலும் விட்டுக் கொடுத்து இறங்கி வருவார் என்று அவருடன் இருப்பவர்கள் கருதுகிறார்கள். "குழப்பமான நிலைகளில் திடீர் முடிவுகளை எடுப்பது ஜெ.யின் வாடிக்கை. அதுவும் சசிகலாவும் உடன் இல்லாத நிலையில் 'அரசியலை விட்டே போகிறேன்' என்று அவர் சொன்னாலும் ஆச்சர்யமில்லை. அதுபோன்ற ஒரு நிலைக்காகத்தான் திருநாவுக்கரசு போன்றோர் அங்கே காத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்கிறார் சைதை துரைசாமி. தேர்தல் கமிஷனில் போராடி இரட்டை இலையை தக்கவைத்துக் கொள்வதில் மிகவும் மும்முரமாக இருக்கிறார் ஜெ! அ.தி.மு.க. ராஜ்யசபை உறுப்பினர்களின் ஆதரவை, பத்திரங்களில் கையெழுத்து வாங்கி வைத்திருக்கிறார்.

தாம் மிகவும் பிரச்னையில் மாட்டியுள்ள இந்தச் சமயத்தில் ஜெ. தம்மைக் கழற்றி விட்டது பற்றி சசிகலாவின் ரியாக்ஷன் எப்படி இருக்கும்? "எல்லாம் ஜெ.தான்" என்று அப்ரூவராக மாறி அவரைச் சிக்கலில் மாட்ட வைப்பாரா? இப்போது மனைவியுடனான உறவைத் தொடரும் வாய்ப்பைப் பெற்ற நடராஜன், ஜெ.வை புதைகுழியில் சிக்க வைப்பாரா? ஏற்கெனவே அமுலாக்கப் பிரிவில் ஜெ.வை 'போட்டுக் கொடுத்து விட்டார் சசி' என்று சிலர் வம்பளந்தாலும் அது உண்மையல்ல என்று அமுலாக்கப் பிரிவு வட்டாரம் சொல்கிறது. "இது ஒரு தாற்காலிக ஏற்பாடு. கஷ்டங்கள் போய் காலம் கூடும் போது, நாம் மீண்டும் இணைந்து கொள்ளலாம் என்று பேசி வைத்து நடிக்கிறார்கள். ஆதலால் இதுபோன்ற கேள்விகள் தேவையே இல்லாதவை!" என்று சொல்கிறது முத்துசாமி அணி.

- ப்ரியன்

# KALKI SHOPPING PAGE

## மணமக்கள் தேவை
## கம்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில்

| | | |
|---|---|---|
| ஆங்கிலம், தமிழ் : | ரூ. | 50/- |
| எதிர்கால கணிப்புடன் | ரூ. | 150/ |
| ஆண்டு பலன் : | ரூ. | 50/- |
| கல்யாண பொருத்தம் : | ரூ. | 50/- |
| Numerology prediction : | Rs. | 50/- |

**CONSULT DIVINE ASTROLOGER**
**THETIYUR V. MAHADEVAN**
**WITH PRIOR APPOINTMENT.**

**ASTROLOGY SOFTWARE FOR SALE.**

## ஸ்வயம்வராலயா

(GOVT. REGD)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33. போன் : 425822, 4846427
மைலாப்பூர் போன் : 8546278,
பெங்களூர் போன் : 3340146

**Learn Astrology through**
**our Correspondence Course**

ALL POOJA ENTHRA/RAKSHA AVAILABLE RATES ON REQUEST



ADYAR

## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

**XEROX**
**LASER PRINTING**
**WORD PROCESSING**
**DTP**
**ELECTRONIC & MANUAL TYPING**
**BINDING & LAMINATION**

**தள்ளுபடி விற்பனை ஆரம்பம் : நாள் 7.9.96 to 20.9.96**



## வைத்தியம் பர்வதா சில்க்ஸ்

உயர்தர மதுரை சுங்குடி புடவை
தயாரிப்பாளர்கள்

1. வடக்கு மாடவீதி, மைலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 495 3264

(A Unit of Golden Trading Corporation)

**உறுதியான சாயம்! தரத்தின் உறைவிடம்!**

- மதுரை சுங்குடி புடவைகள்
- **Batik** சுடிதார்
- தேவேந்திரா சாரீஸ்
- **Fancy** காட்டன் புடவைகள்
- **RANEE** சுங்குடி

தயாரிப்பாளரின் நேரடி விற்பனை நிலையம்

மொத்த விற்பனையாளர்கள் மற்றும் வீட்டிலிருந்து வியாபாரம் செய்பவர்கள் வரவேற்கப்படுகிறார்கள்.

**வைப்பு நிதி (Deposits) & சேமிப்புத் திட்டம் (Savings Scheme) விரைவில் ஆரம்பமாகிறது.**

# KALKI SHOPPING PAGE

**FOR THE LOVERS OF SUNGUDI SAREES**

**A FINEST SUNGUDI SAREES OFFERED TO OUR CUSTOMERS PAY A VISIT AND SEE THE COOL AND COMFORT OF**

## SAKUNTHALA SAREES

ALSO AVAILABLE

- RANEE SAREES
- BENGAL COTTON SAREES
- BENGAL PRINTED PURE SILKS
- BATIK COTTON SAREES
- CHUDDIDAR MATERIALS (FINE & COLOURFUL BATIK WORKS)

## MADURAI TEXTILES

**SHOW ROOM FOR SUNGUDI SAREES**

2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZAAR, MADRAS - 17
(Near Agasthiyar Temple)

## ஸ்ரீ நடராசத் தத்துவம்

**ஆசிரியர் டாக்டர். வை. தட்சிணாமூர்த்தி**

சிதம்பரத்தில் கோவில் கொண்டுள்ள நடராசப் பெருமானின் சிறப்புக்கள் அனைத்தையும் உள்ளடக்கி இந்த ஆன்மீகப் படையலைப் படைத்துள்ளார் நூலாசிரியர். சிவதாண்டவ மூர்த்தங்களின் தொன்மை, வளர்ச்சி, நடராசர் திருவடிவத்தின் தத்துவம், சிவநெறி, பரவியுள்ள இடங்களிலெல்லாம் நடனப் பெருமான் வழிபாடு நிலவுதல் உள்ளிட்ட பலஅரிய அபூர்வ செய்திகளுடன், ஆய்வு செய்து அருமையாகப் படைக்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீநடராசப் பெருமானின் அட்டைப்படம் முகப்பை அலங்கரிக்கிறது. புத்தகத்தினுள் அற்புதமான படவிளக்கங்களுடன் கூடிய நூல். ஆன்மீகவாதிகள் கற்று உணர்ந்து போற்றிப் பாதுகாக்க வேண்டிய நூல்.

**டெம்மி சைஸ் பக்கங்கள் – 276**

**விலை ரூ. 80–00**

*தேவையான புத்தகங்களை வி.பி.பி.யில் பெற கடிதம் எழுதுங்கள். வி.பி.பி. செலவு தனி. புத்தக வியாபாரிகள் எழுதவும்.*

விபரங்களுக்கு

**வானதி பதிப்பகம்**
நெ. 13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை – 600 017.
போன்: 4342810

## சொர்ண வர்ஷா

### தங்க நகை சேமிப்புத் திட்டம்







ரூ. 34 லட்சம் மதிப்புள்ள 734 பரிசுகள் (போனசுடன்)

மாதம் ரூ. 250 வீதம் 25 மாதங்கள்

- பம்பர் குலுக்கல் : அழகிய ஃபிளாட், மாருதி வேன் போன்ற பரிசுகள்
- பிரதி மாத குலுக்கலில் கலர் டி.வி., ஏர்கூலர், வாக்குவம் கிளீனர், தங்க காசுகள் போன்ற பரிசுகள் உண்டு.

திட்டத்தில் சேரும் உறுப்பினர்களுக்கு வழங்கப்படும் 'அமுதசுரபி' கோல்டு கார்டு மூலம் சிறப்புச் சலுகைகள் பெற்றிடலாம்.

குறிப்பிட்ட உறுப்பினர்களே!



**ஜீவல்லர் சோழா**

15, வடக்கு மாடவீதி, மைலாப்பூர்,
சென்னை – 4. போன் : 4940199

# ஜெயலலிதா அரசியலுக்கு முழுக்குப் போட்டால்...?

• போடாத முழுக்கு!

● வி. அருண் சொல்லரசு, கீரமங்கலம்.

? தி.மு.க. ஆட்சியில் ஊழல் நடக்கவே நடக்காது என்று நீங்கள் நம்புகிறீர்களா...?

! நடக்கக்கூடாது என்று விரும்புகிறேன்.

● எஸ்.எஸ்.டி. ராஜன், சிறுதையூர்.

? மணிரத்னம் மீது சரத்குமார் குறைகூறியிருக்கிறாரே... அதற்கு மணிரத்தினத்தின் பதில் என்ன...?

! மணிரத்னம் எப்போதுமே மௌனரத்னம். பதில் சொல்வார் என்று எனக்குத் தோன்றவில்லை... ஆனால் சரத்குமாரின் சாடலுக்குப் பிறகுதான் மெள்ள, கோடம்பாக்கம் வட்டாரங்களில் செய்தி வெளியே வருகிறது; டைரக்டரிடம் இதுபோல் அவமரியாதையைப் பரிசாகப் பெற்றோரின் பட்டியல் மிக நீளமாமே!

• பிசாசுப் பன்னிரண்டு கோடி!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம் - 1.

? 'நான் ஆத்திகன்' என கருணாநிதி கூறியுள்ளாரே...?

! நான் வெஜிடேரியன் என்பது போலத்தான்! 'யாருமே நூறு சதவிகிதம் ஆத்திகனும் அல்ல; நூறு சதவிகிதம் நாத்திகனும் அல்ல...' - இவ்வாறு யார் சொன்னார்கள் என்பது ஞாபகமில்லை. ஆனால் ஏற்கக்கூடியதுதான்!

● கே. திருக்குமரன், கடையம்.

? ஜெ திடீரென்று அரசியலுக்கு முழுக்குப் போட்டால் எப்படி இருக்கும்...?

! அப்படி அவர் செய்தால், அவர் பேரில் வழக்குப் போட்டு 'உள்ளே' தள்ளுவது ரொம்ப சுலபமாயிருக்கும். அதனாலேயே அவர் அரசியலுக்கு முழுக்குப் போட மாட்டார். தொடர்ந்து கட்சித் தலைவராக இருந்தபடியே அறிக்கைகள் வெளியிட்டு, மக்களை மூளைச் சலவை செய்யும் முயற்சிகளில் ஈடுபட்ட வண்ணம் இருப்பார்; அவர்களின் அனுதாப ஆதரவைப் பெற முயற்சி செய்வார். அவர் தப்பிக்க ஒரே மார்க்கம் அதுதான்!

● எம்.ஜே. சுந்தரலட்சுமி, திருநெல்வேலி.

? நதிநீர்ப் பிரச்னைகளுக்குத் தீர்வுதான் என்ன...?

! ஆயக்கட்டு உரிமைகளை மதித்து நடப்பது தாற்காலிகத் தீர்வு. நதிகளை தேசிய உடைமையாக்கி, ஒன்றுடன் ஒன்று இணைப்பது நிரந்தரத் தீர்வு.

● சுதந்திரச்செல்வன், சித்தமல்லி.

? கடந்த நாற்பத்தொன்பது ஆண்டுகளில் சாதித்தது என்ன...?

! இப்படி ஒரு கேள்வி கேட்கிற அளவுக்கு இன்னமும் உயிரோடிருக்கிற ஜனநாயகம்!

● என். சுவாமிநாதன், திருநெல்வேலி - 7.

? 'காதல் கோட்டை'யின் பலமான தூண் எது...?

! கதை! - அது அகத்தியனுடையதாக இருந்தாலும் இல்லாவிட்டாலும்.

● தேவந்தி துரைராஜ், திருப்பத்தூர்.

? 'நடமாடும் காந்தி' என்று கலைஞர், சட்டசபையில் பாராட்டப்பட்டுள்ளமை பற்றி..

! ஸாரி, ரொம்ப ஓவர்!

● ஆர்.கே. சம்சுகனி, டி. மாரியூர்.

? 'உங்கள் பெண்ணுக்கு மாப்பிள்ளையை எப்படித் தேர்ந்தெடுப்பீர்களோ அதே போல் தேர்தலில் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுங்கள்' என்று தேர்தல் ஆணையர் டி.என். சேஷன் கூறியது பற்றி...?

! யார் தலையிலாவது கட்டினால் போதும்; எப்படியாவது பெண்ணுக்குக் கல்யாணம் ஆனால் சரி... என்று எத்தனை பெற்றவர்கள் எண்ணுகிறார்கள்! - இந்த விவரம் சேஷனுக்குத் தெரியாது போலும்!

● ஜே. வி.ஆர்., கமுதி.

? சசிகலாவுக்கு 12 கோடி ரூபாய் அதிகமான தொகையாமே!?

! சட்டரீதியான காரணங்களுக்காக உயர்

• மாப்பிள்ளை தேடல்!

நீதி மன்றம் அவ்வாறு நினைக்கலாம்; ஆனால் மக்கள் அப்படிக் கருதவில்லை...

● எம். கதிஜா ஹனிபா, திருச்சி – 6.

*? 'எங்கள் மீது வழக்குப் போடும் கருணாநிதி என்ன மனுநீதிச் சோழனா? சத்யசீலரா? அல்லது உத்தமரா? அவருடைய ஊழலால் தானே அ.தி.மு.க.வே தோன்றியது!' என்று காளிமுத்து பேசியிருப்பது பற்றி...?*

! எப்படிப் பார்த்தாலும் தாங்கள் உத்தமர்கள் என்று சொல்லிக் கொள்கிற நிலையில் அ.தி.மு.க.வினர் இல்லை. அதுமட்டுமல்ல... தவறு செய்த அதி.மு.கவினர் மீது நடவடிக்கை எடுப்பதற்குத்தான் மக்கள் கருணாநிதியைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் என்கிற அடிப்படை அறிவு கூட காளிமுத்துவுக்கு இல்லாமல் போனதே!



• அரசியல் கலக்காத...



• ...சொந்த விஷயம்!

● பழ. சேதுராமன், மதுரை – 2.

*? பால்தாக்கரே – கௌடா – என்ன பேசி யிருப்பார்கள்...?*

! அரசியலே பேசவில்லை என்கிறார் தேவே கௌடா. ஒருவேளை இப்படிப் பேசி யிருப்பார்களோ...

"உங்க குடும்பத்துலே அடுத்தடுத்து சோகங் கள்..."

"ஆமாம்! உங்க குடும்பத்துல எப்படி....?"

"அதை ஏன் கேக்கறீங்க... நித்ய கண்டம், பூர்ணாயிசுதான்!"

"கூட்டுக் குடும்பம்னா அப்படித்தான் இருக்கும். ஒற்றுமை குலையாதவரை கவலை யில்லை..."

"ஒற்றுமைக்கு ஆதரவு தராதச் சொல்லிக் கிட்டே, வெளியேயிருந்து சதிபண்ணிடு வாங்களோன்னு கவலையா இருக்கு..."

"தைரியமா இருங்க! அப்படி ஏதும் நடந்தா, ஆபத்துக்கு உதவ எங்க கூட்டுக் குடும்பம் தயாரா இருக்கு."

"உங்களுக்கு ஆறுதல் சொல்ல வந்தேன், எனக்கு ஆறுதல் சொல்லி அனுப்பறீங்க... ரொம்ப நன்றி!"



• மௌனரத்னம்!

● ஜே. கண்ணன் சென்னை – 101. ❑

*? அணு ஆயுதப் பரவல் ஒப்பந்தத்தை எதிர்க்கும் இந்தியா, 'பொருளாதாரத் தடை' என்கிற ஆயு தத்தை அமெரிக்கா உபயோகிக்க ஆரம் பித்தால் என்ன செய்யும்...?*

! முன்னதில் இந்தியாவின் தார்மிக பலம் மேலோங்கியுள்ளது; பின்னதில் அமெரிக்கா வின் அதர்மப் போக்கு பொதிந்து கிடக்கிறது... அதனால் பின்னது நடைபெறாது. வேறு தகுந்த காரணம் கிடைக்கும்வரை காத்திருந்து அமெரிக்கா பழிவாங்கக்கூடும். ஏட்டிக்குப் போட்டியாக நடந்து கொள்ளாது.

● அஜார், சென்னை – 18.

*? ஒரு வழக்கிலே ஜாமீனில் வெளியே விட்டுவிட்டு, படக்கென்று புது வழக்கில் உள்ளே போடுவது பாவமாயில்லை?*

! நீதித் துறைக்கு 'ஐயோ, பாவம்' அனு தாபமெல்லாம் கிடையாது.

● வி. மோகன், நெல்லிக்குப்பம்.

*? "பத்திரிகைகளின் ஆதரவு இல்லாமலேயே இப்போது நான் நாட்டின் மிகப் பெரிய பதவியில் இருக்கிறேன்" என்று பிரதமர் பேசியுள்ளது பற்றி...?*

! அவர் சந்தர்ப்பவசத்தால் பிரதமராகியிருக் கலாம். ஆனால், அவருக்கு ஆதரவு தந்து பதவியில் அமர்த்தியிருப்பவர்கள் அனை வருமே பத்திரிகை ஆதரவுடன் பதவிக்கு வந்த வர்கள்தான். எனவே கௌடாவின் வாதம் குதர்க்கமானது.

● எஸ். அருள்மொழி, காட்டூர்.

*? டி.வி.வியைத் தாக்கியவர்களுள் ஒருவரைச் சந்தித்துள்ள ஆங்கில இதழ் நிருபர், அந்த நபரை அடையாளம் காட்ட வேண்டும் என்கிறாரே முதல்வர்? – இது சந்தன வீரப் பனின் சன் டீ.வி. பேட்டிக்கும் பொருந்துமீ அல்லவா?*

! டிவிவி. சொன்னதை வைத்துத்தான் தங்கள் நிருபர் செய்தி தந்தார் என்றும், அந்த நிருபர், குண்டர்களை நேரில் பார்க்கவில்லை என்றும், ஹிந்து இதழ் விளக்கம் கூறியுள்ளது. என்றாலும் நீங்கள் எழுப்பியிருக்கும் கேள்வி நியாய மானதே. ஆனால், வீரப்பன் விஷயத்தில் சன் டீ.வி.யைக் காட்டிலும் 'நக்கீரனு'க்குத்தான் பொறுப்பு அதிகம்.

> ❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
> ஜே. கண்ணன்,
> 246, பதினோராவது தெரு,
> அண்ணா நகர் மேற்கு,
> சென்னை – 101.

# கார்ட்டூன்களைக் காண கண்கோடி வேண்டும்!

✉ அலமாட்டி அணை பற்றிய செய்திகள் படித்தும் புரியாமல் அலுத்துக் கொண்டிருந்த எனக்கு, கல்கியின் தலையங்கம் விலாவாரியாக எடுத்துக்காட்டியது விளங்கக் கூடியதாக இருந்தது. பதவியைக் காப்பாற்றிக் கொள்ளும் நோக்குடன் மட்டுமே செயல்படாமல், பிரதமர், நாட்டின் தலைவராய் நடுநிலை வகித்து, நியாயம் வழங்க முற்படுவது மிகவும் அவசியம். நியாயத்திற்குக் காயம் ஏற்படாதவாறு தாங்கள் (குட்டி) சுட்டிக்காட்டியிருப்பது பாராட்டுக்குரியதாகும்.

பெங்களூர் - 47, மு. புஷ்பராசன்.

✉ 'தர்மயுத்தம், அக்னி பிரவேசம்' என்றெல்லாம் பேசுவதால் என்ன பயன் என்பதை முன்னாள் முதல்வர் எண்ணிப் பார்க்க வேண்டும். கோர்ட்டில் சந்திக்கத் தயார் எனச் சவால் விடுவதும் வழக்கு என வந்ததும் முன்ஜாமீன் கேட்பதும் முற்றிலும் முரண்பாடல்லவா? தெரிந்தோ தெரியாமலோ புரிந்த அட்டூழியங்கள் அல்லல் தராதா? கார்ட்டூன்கள் இரண்டையும் காணக் கண்கோடி வேண்டும். கல்கிக்கு சபாஷ்!

பொறையாறு, கானா. கணேசன்.

✉ கடந்த நூறு நாட்களும் ஆக்கமுடன் ஆட்சி நடத்தியுள்ள முதல்வர் கலைஞருக்கு, 'பழிவாங்கவில்லை பணியாற்றுகிறார்' என்று தராசு நற்சான்றிதழ் தந்திருப்பதும் 'நம்பிக்கை தரும் ஆட்சி' என்று த.மா.கா. எம்.எல்.ஏ. சொக்கர் நற்சான்றிதழ் கொடுத்திருப்பதும் அவருக்கு மேலும் மேலும் சிறப்பாகப் பணியாற்றும் ஊக்கத்தை வழங்கிடும் ஒரு சிறந்த டானிக். நல்லவைகளைப் பாராட்டி - தவறுகளைச் சுட்டிக்காட்டி ஒரு நடுநிலை வார இதழாக இருக்கின்ற கல்கியைப் பாராட்டுகிறேன்.

பெங்களூர் - 21, ப. மூர்த்தி.

✉ 'அஜீத் பேட்டி கள்ளம் கபடமில்லாமல், உண்மைகளை மறைக்காமல் (ஹீரா உட்பட) வெளிப்படுத்தியது அருமை. நிச்சயம் தமிழ்த் திரைப்பட உலகை ஒரு கலக்குக் கலக்குவார் அவர்.

ஒட்டன்சத்திரம், செ. ரா. ரவி.

✉ இளம் புயல் அஜீத்தின் வண்ண அட்டைப் படம் அழகாக ஜொலித்தது. பேட்டி அவரது மனத்தைத் திறந்து காட்டியது. ஒவ்வொரு ஸ்டில்லிலும் அவரது முகபாவம் பளிச். சபாஷ் யோகா!

தூத்துக்குடி, எஸ். ராமசுப்பிரமணியன்.

✉ தெய்வத்தின் அம்சமாகக் கருதும் பசுமாடுகளுக்குத் தங்கள் சுயலாபம் கருதி 'மால்ட்' என்கிற சாராய ஆலைகளின் கழிவுப் பொருளையும், தடைசெய்யப்பட்ட ஆக்ஸிடோசின் என்ற ஊசி மருந்தையும் செலுத்துகிற அவலத்தைப் படித்த பொழுது உள்ளம் பதைத்தது. ரத்தம் கொதித்தது. அவைகளுக்கு இழைக்கப்படும் இந்தச் சித்திரவதையை விலாவாரியாக விளக்கியதோடன்றி, அந்தப் பாலைக் குடிக்கும் மழலைகள் முதல் வயோதிகர் வரை என்னென்ன நோய்க்கு ஆளாகப் போகிறார்களோ என்ற நியாயமான அச்சத்தையும் கிளப்பியிருக்கிறீர்கள்!

மதுரை - 14, எஸ். வைத்தியநாதன்.

✉ ஜி. நாராயணன் எழுதிய 'புதிய ஒதுக்கீடுகள்' அருமையான சிறுகதை. 'யாராக இருந்தாலும் சுயபலம்தான் அஸ்திவாரம். அதுதான் நிற்கும்.' அழுத்தமாகச் சிந்திக்க வைத்த வரிகள். என் பாராட்டுக்கள்!

சேத்துப்பட்டு, ஆர். பார்த்திபன்.

✉ 'சாராயப் பானையில் குண்டுகள் பாயும்' - கலைஞரின் எச்சரிக்கை சொக்கரை மட்டுமின்றி மக்களையும் சொக்க வைத்த ஒன்று. அது மட்டும் போதாது. இந்தியத் தயாரிப்பு அன்னிய மதுபானக் கடைகளையும் படிப்படியாகக் குறைக்க வேண்டும். கலைஞரின் இன்றைய ஆட்சியில் மக்களுக்கு இதுவரை இல்லாத நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. அதை உறுதிப்படுத்திக் கொள்ள கலைஞர் முற்பட வேண்டும்.

வேலூர்-6, எல். கோபாலகிருஷ்ணன்.

## ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

✉ கல்கி(25.8.96)யின் 3-ம் பக்கத்தில் உள்ள சிரிப்புத் துணுக்கை இன்னும் கொஞ்சம் கீழ்க்கண்டவாறு விரிவுபடுத்தி இருந்தால் இன்றைய நிலைக்கு இன்னும் நன்றாக இருக்கும்.

"சார், வட்டி இல்லாத லோன் கொடுத்திங்க, தவணை முறையில கட்ற மாதிரி லோன் கொடுத்திங்க, தள்ளுபடியோட லோன் கொடுத்திங்க... எல்லாம் சரி; திருப்பிக் கட்டத் தேவை இல்லாத லோன் இருக்கா பாருங்க!"

இது பிரசுரமானது. இதனைத் தொடர்ந்து,

"இருக்கு அதெல்லாம் ஆட்சியில் உள்ள அரசியல்வாதிகளுக்கு மட்டும்தான் தருவோம்!"

என்று பாங்க் மானேஜர் சொல்வது போல் இருந்திருக்கலாம்.

விழுப்புரம், டி. சாந்தாராம்.

# வாரம் ஒரு போட்டி - 6; பரிசு ரூ.5000!









இங்குள்ள அரசியல் தலைவர்களுக்குப் பொருத்தமாகச் சில காய்கறி வகைகள், பழ வகைகள், வெயிலுக்கு இதமாகச் சாப்பிடுகிற - குடிக்கிற இயற்கை வகைகள் மற்றும் எண்ணெய் வித்துக்களின் பெயர்கள் அமைந்துள்ளன. எந்தத் தலைவருக்கு எந்தப் பெயர் பொருந்தும்?

நீங்கள் கண்டுபிடிப்பதற்கு வசதியாக ஒவ்வொரு தலைவருக்கும் 'க்ளூ'க்களும் கொடுத்திருக்கிறோம். உதாரணமாக டி.என்.சேஷனுக்கு எது பொருத்தமாக இருக்கும் என்பதை நாங்களே கொடுத்திருக்கிறோம்.

நீங்கள் செய்ய வேண்டியது கீழுள்ள கூப்பனிலிருக்கும் தலைவர்களின் பெயர்களுக்குப் பக்கத்தில் அவர்களுக்குப் பொருந்துகிற பெயர்களை எழுதியனுப்ப வேண்டியதுதான். சரியாக எழுதும் ஒரு நபருக்கு பரிசு ரூ.5000! பல பேர் சரியாக எழுதினால் குலுக்கல் முறைதான். ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**கடைசி தேதி : 16.9.96**

உதாரணம் :- டி.என்.சேஷன் : 'கில்' ஜஸ்வாட்டரும் 'கிருஷ்ணமூர்த்தி' குளிர் பானமும் கூடவே அருந்தினாலும் குறையாத உறைப்பு! விடை : பச்சை மிளகாய்!

இனி நீங்களே ஜமாயுங்கள்!

1. மூப்பனார் : அறிவு விருத்தி ; ஆனாலும் சில சமயங்களில் வழவழா கொழகொழா!

2.தேவேகௌடா : நிறைய நீர்ச்சத்து மிகுந்த பழம். ஆனால் துளி நீர்கூட அண்டைப் பகுதிக்கு லீக் ஆகி விடாது.

3. ஜெயலலிதா : பலவிதங்களில் தமிழகத்தின் திருஷ்டி

4. லட்சுமி பார்வதி : மசாலா விஷயங்களுக்கு உதவி. தேர்தல் முடிவுகளைப் பார்த்தால் உரிக்க உரிக்க ஒன்றுமில்லை.

5. ஹெக்டே : உயர் பதவியில் ஜனதா (தள்). உதவிய இவருக்கு கல்தா.

6. நரசிம்மராவ் : இதன் எண்ணெய் போலத் தான் இவர் முடிவுகளும். இப்போதைக்கு மத்திய அரசுக்குப் பேதி மருந்து.

7. கருணாநிதி : வழுக்கை அதிகமாக ஆக இளமை!

## ஜாலி போட்டி - 6

1. மூப்பனார் :
2. தேவேகௌடா :
3. ஜெயலலிதா :
4. லட்சுமி பார்வதி :
5. ஹெக்டே :
6. நரசிம்மராவ் :
7. கருணாநிதி :

பெயர் :........................................................................

முகவரி :........................................................................

...................................................................................

...................................................................................

# ஆஹ்... ஹாஹ் ஹா...




"நீங்க நல்ல அறிவாளியா, உழைப்பாளியா இந்தப் பணிக்கு ஏத்தவரா இருக்கீங்க... ஜாதி சான்றிதழ் மட்டும் எப்படியாவது தேத்திட்டு வந்தீங்கன்னா வேலை கொடுக்கலாம்...."




"நாங்க கொடுக்கற தவறான தகவல்களையெல்லாம் தானா திருத்திக்கக் கூடிய கம்ப்யூட்டர் ஏதாவது கிடைக்குமா...?"




"நாம் ஆராய்ச்சி பண்ணிக் கண்டு பிடிச்சுருக்கற முதல் உண்மை என்னன்னா, நாம யாரும் இன்னும் மதிய உணவு சாப்பிடலை என்கிறதுதான்..."




"புலனாய்வெல்லாம் நடத்திக்கிட்டிருக்கோம். நம்பும்படியா ஒரு கதையைத் தயாரிக்கப் பதினஞ்சு நாளாவது அவகாசம் வேணும்..."

— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்



# செய்திகள், வாசிப்பது செம்பியன்...

சச்சினை காப்டனாகக் கொண்டு ஆடப்பட்டிருந்த முதல் ஒருநாள் டெஸ்ட் இந்தியாவுக்குத் தோல்வியில் முடிந்தாலும் மோசமாக ஆடினார்கள் என்று கூறமுடியாது. நம்மை விட ஸ்ரீலங்கா அணி சிறப்பாக விளையாடியது. குறிப்பாக ஜெயசூர்யா. அவர் ஒரு ரன் எடுக்கும் மிஷின்! விளையாட்டில் வெற்றி தோல்வியை விட, முயற்சிதான் முக்கியம் என்பதால் டெண்டுல்கருக்கும் இந்திய அணிக்கும் அடுத்து வரும் ஆட்டங்களில் 'குட்லக்' சொல்லுவோம். கூடவே அர்ஜுனா விருதுபெறும் கும்ளேக்கு ஒரு ஸ்பெஷல் வாழ்த்து.

ஸ்ரீலங்காவுக்கும் தமிழ்நாட்டுக்கும் இடையே ஆடப்பட்டு வந்த கோபாலன் டிராஃபி மாட்ச் சில ஆண்டுகளாக நடைபெறாமல் நின்று போயிருக்கிறது. அதை மறுபடி ஆரம்பிக்க வேண்டும் என்ற யோசனை சிறந்த ஒன்று. முன்பு தமிழ்நாடு அணியுடன் ஆடியதில் ஸ்ரீலங்கா தன் ஆட்டத்தை வளர்த்துக் கொண்டு பயன்பெற்றது. இப்போது அவர்கள் எங்கோ உச்சியில் இருக்கிறார்கள். அவர்களுடன் ஆடுவது இப்போது தமிழக கிரிக்கெட் பலம் பெற உதவும். இந்திய அணியில் தமிழக ஆட்டக்காரர்கள் இல்லாத குறை நீங்க வேண்டும். சிறந்த ஆட்டக்காரர்களை தமிழகம் உருவாக்க கோபாலன் டிராஃபி பந்தயம் துணை செய்யும்.

இந்தியாவில் சிறுவர் சிறுமியர் செய்யும் குற்றங்கள் அதிகரித்து வருவதை வலியுறுத்த புள்ளி விவரங்களைத் தந்துவிட்டு, காரணங்களை அலசுகிறது ஹிந்து தலையங்கம் ஒன்று. 'அமெரிக்காவில் ஒரு சிறுவன் 10-11 வயதாகு முன்னர் டீவியில் 8000 கொலைகளையும் 10,000 இதர விதமான குற்றங்களையும் பார்க்கிறான்; நமது நாட்டிலும் இந்தப் போக்கு அதிகரித்து வருகிறது' என்று சுட்டிக்காட்டும் ஹிந்து, குறிப்பாக 'பாண்டிட்குவீன்' படத்தையும் 'இந்தியன்' படத்தையும் உதாரணங்களாக்குகிறது. 'இந்தியன்' படத்தில் தன்னால் குற்றவாளி என்று கருதப்படுகிறவர்களை தன் மகன் உள்பட – அந்த சுதந்திரப் போராட்ட வீரன் கொன்று விடுகிறான். இவ்வாறு சட்டத்தைத் தானே உருவாக்கி, தண்டனையைத்தானே வழங்கி, தானே நிறைவேற்றுவது தவறான உணர்வுகளை சமுதாயத்தில் நிச்சயம் உருவாக்கும் – குறிப்பாக இளம் உள்ளங்களில். படத்தின் வெற்றி தோல்விகளை எண்ணி பத்திரிகைகள் விமர்சனம் செய்ய முடியாது. சமுதாயப் பிரக்ஞையுடன்தான் விமர்சனங்கள் அமையும். அமையவும் வேண்டும்.

அந்நாளையப் படங்கள் வீரத்தைப் போற்றின. இன்றைய படங்கள் வன்முறையை வணங்குகின்றன. கொலைகள் செய்பவன் கூட இன்று 'ஹீரோ' ஆக்கப்படுகிறான். வீரத்துக்கும் வன்முறைக்கும் இடையே இன்று வித்தியாசம் இல்லாமல் போய் விட்டது. வீரத்துக்கு எடுத்துக்காட்டாக அண்மையில் நிஜமாகவே நடந்த ஒரு சம்பவத்தைப் பாருங்கள்! ஒரு சிறிய விமானத்தில் சிலர் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். கீழே இறங்க வேண்டிய நேரத்தில், உள்வாங்கியிருந்த சக்கரங்கள் சிக்கிக் கொண்டு வெளியே வர மறுத்தன. பயணிகளில் ஒருவர், "என் கால்களை கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள்" என்று சகபயணிகள் இருவரிடம் கூறிவிட்டு, கதவு திறந்து, வெளியே தலைகீழாகத் தொங்கி, கைகளை நீட்டி, சிக்கியிருந்த சக்கரங்களை விடுவித்தார். 'தடக்'கென்று அவை நீண்டன. பிறகு இவரை உள்ளே இழுத்துக் கொள்ள, கதவு மூடி, விமானம் பத்திரமாகத் தரை இறங்கியது. இவ்வாறு பயணிகளைக் காப்பாற்ற எவ்வளவு வீரம் தேவை? இதை ஏன் சினிமா ஆக்கக் கூடாது?

சுக்ராம் திரும்பி வருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். வரலாம், கைதாகி, வழக்கு நடந்து, தண்டனையும் பெறலாம். ஆனால் தீராப் பழி காங்கிரஸுக்குத்தான். இன்று அவரை கட்சியிலிருந்து விலக்கி விடலாம். ஆனால் முன்பு அவர் தகவல் தொடர்புத் துறை அமைச்சராக இருந்தபோது கூறப்பட்ட குற்றச்சாட்டுக்களை மறுத்து, அவரைப் புனிதராகக் காட்டிய நரசிம்மராவ் அரசின் அவமானம் துடைக்க முடியாத ஒன்று.

ஹலோ சுகமா?

# காதுகளைப் பற்றி கவலைப் படுவதுண்டா?

சிலர் காதுல சோப்பு போச்சா, இல்லையான்னு பார்க்காமலேயே குளிச்சிட்டு வெளில வருவாங்க. காதுக்கு நாம செய்யற பெரிய துரோகம் அது!

நெதர்லாந்துல வசிக்கிற ஹென்றி ஜாக்ஸன் ஒரு பெரிய டாக்டர். ரெண்டு மாசம் முன்னாடி இந்தியா வந்திருந்தார் உலகத்துலேயே விரல் விட்டு எண்ணக்கூடிய மிகச் சிறந்த ENT ஸ்பெஷலிஸ்டுகள்ல அவர் ஒருத்தர். தற்செயலா, அவர் வந்திருந்தபோது, சந்திக்கிற வாய்ப்பு எனக்குக் கிடைச்சுது.

பேச்சுவாக்குல அவர் ஒரு விஷயம் சொன்னார், ஆடிப் போயிட்டேன்! உலக மக்கள் தொகையில இருபது சதவீதம் பேருக்குக் காது கேக்காதாம்! இதுல இன்னொரு பெரிய சோகம் என்னன்னா, அந்த இருபது சதவீதத்துல ஒன்பது சதவீதம் பேர் குழந்தைகள்!

'காது கேளாமை, அப்படீங்கறது, மிகச் சில பேருக்கு மட்டும் பிறவியிலேருந்தே இருக்கக் கூடிய குறைபாடுதான், அப்படின்னாலும், சரியான பராமரிப்பு இல்லாத காரணத்தாலேயே செவிடாகிறவர்கள்தான் அதிகம்' அப்படீன்னு அவர் சொன்னது, நாம யோசிக்க வேண்டிய விஷயம்.

பொதுவா நாம காது விஷயத்துல அதிக கவனம் எடுக்கறது இல்லை. சில மாமாக்களெல்லாம் பார்த்தீங்கன்னா, காதுல சோப்பு போச்சா, இல்லையான்னு பார்க்காமலேயே குளிச்சிட்டு வெளில வருவாங்க. காதுக்கு நாம செய்யற பெரிய துரோகம் அது!

நாம காதை அவ்வளவா கவனிக்க மாட்டோம்னு தெரிஞ்சுதான் கடவுளே அதுக்கு ஏகப்பட்ட செக்யூரிட்டி குடுத்திருக்கார். மேல் காது, நடுக்காது, உள் காதுன்னு அலிபாபா குகை மாதிரி நிறைய வளைவுகளோடும் பாதுகாப்போடும் உள்ளது நம் காது.

அப்படியும் நாம என்ன பண்றோம்? காதுல அழுக்கு சேர்ந்தால் கவனிக்கறதில்லை. குளிச்சதும் உடம்பைத் துடைக்கிற மாதிரி காதுகளையும் சுத்தம் பண்றதில்லை. பொழுது போகலைன்னா பென்சில், பின், (கடப்பாரை தான் பாக்கி) அப்படீன்னு கிடைச்சதை வெச்சிக் குடையறோம்.

இதெல்லாம் ரொம்பத் தப்பு. நடுக் காதுன்னு சொன்னேனே, அதுல ஒரு திரை இருக்கு. 'செவிப்பறை'ன்னு சொல்வாங்க. ஒலியெல்லாம் முதல்ல அதுல போய்த்தான் மோதுது. அதிர்வுகளை தான் வாங்கிட்டு, ஒலியை உள் காதுக்கு அனுப்புது. அங்க 'காக்ளியா'ன்னு ஒரு வஸ்து இருக்கு. ஒரு மாதிரி திரவமும் அந்தத் திரவத்துக்கு நடுவுல நுண்ணிய ரோமங்களுமா இருக்கும். இந்த ரோமங்களிலேருந்து சில நரம்புகள் தனித் தனியா கிளம்பி மூளைக்குச் செல்கிறது. (மூளையை அடையும்போது ஒரே நரம்பாயிடும்) இந்த நரம்புகள் வழியாகத்தான் ஒலிகள் நம் மூளையை எட்டுது.

இத்தனை பக்காவான சிஸ்டம் கொண்டது நம் காது. இதைப் பராமரிக்காட்டா எப்படி?

உதாரணமா, பென்சிலைப் போட்டு காது குடைஞ்சோம்னு வெச்சிக்குங்க. செவிப்பறை கிழிஞ்சுட வாய்ப்பு இருக்கு. செவிப்பறைங்கறது சொர்க்க வாசல் மாதிரி. "அது கிழிஞ்சுட்டா பிரச்னைதான். ரத்தம் வடியறது ஒரு பக்கம் இருக்கட்டும். அழுக்கு, தூசியெல்லாம் சுலபமா உள்ளே போயி, 'காக்ளியா குளத்துல உக்காந்துடும். விளைவு? சீழ் பிடிக்கும். அடிக்கடி காது வலிக்கும்.

உடனே நம்ம பாட்டிகள் என்ன பண்ணுவாங்க?

சீதளம்னு சொல்லிட்டு, நல்லெண்ணெய், விளக்கெண்ணெய்னு கிடைக்கிறதையெல்லாம் காய்ச்சி, காதுல ஊத்துவாங்க. இது இன்னும் டேஞ்சர்.

இந்த எண்ணெய் சமாசாரத்துல நம்பிக்கை இல்லாதவங்க, தன்னைத் தானே டாக்டரா நினைச்சிக்கிட்டு ஏதாவது ஒரு 'இயர் டிராப்'லை (பத்து வருஷத்துக்கு முன்னாடி யாராவது பிரிஸ்கிரைப் பண்ணியிருப்பாங்க.) வாங்கி ஊத்துவாங்க. இது ரொம்ப ரொம்ப டேஞ்சர்.

காது வலின்னு வந்துட்டா உடனே டாக்டரைப் போய்ப் பார்த்துடறது தான் பெட்டர்.

ஒருத்தருக்கு வேற ஏதாவது நோய் இருந்து, அதுக்காக டாக்டர் ஜெண்டாமைசின், கானாமைசின் மாதிரி ஏதாவது மருந்து கொடுத்திருந்தாங்கன்னா, அதனால செவி நரம்புகள் பாதிக்கப்பட சான்ஸ் இருக்கு. என்ன கோளாறு, என்ன காரணம்னு டாக்டர் பார்த்து முடிவு செய்யறது தான் நியாயம். சுய மருத்துவம் உதவாது.

இந்த சிக்கலெல்லாம் இல்லாம, காதுகளை ஒழுங்கா பராமரிக்கறது ரொம்ப ஈஸி! பாருங்க, இப்ப பைக்ல போறீங்கன்னு வெச்சுக்குங்க...

கொஞ்சம் பஞ்சு அடைச்சுட்டுப் போறது பெட்டர். தூசு படியாதுங்கறது மட்டுமல்ல... லாரிக்காரன் ஹாரன் அடிச்சி செவிப்பறை கிழியறதுலேருந்தும் தப்பிக்கலாம்.

அப்புறம் அதிகக் குளுமையான பானங்கள் கூடாது. காது வலி அதுனாலயும் வரும்.

ஜலதோஷம் பிடிச்சால், மூக்கை பலமா சிந்தாதீங்க. காது அடைச்சிக்கும்.

அதிக ஒலி வர்ற இடங்கள்ல (பஸ்ஸோ, லேத் ஒர்க் ஷாப் - மத்த மிஷினரீஸ்ல இருக்கறவங்க) வேலை செய்யறவங்க "Muff" அப்படீன்னு சொல்லக்கூடிய 'ஒலித்தடுப்பான்' வாங்கி மாட்டிக்கலாம்.

ரொம்ப நேரம் கடுமையான டிஸ்கோ, ஜாஸ் மியூஸிக்கெல்லாம் கேக்காதீங்க. அதிர்வுகளால்கூட செவிப்பறை கிழியும்!

-சுமி

# KALKI SHOPPING PAGE

## மீராவின் வைப்பு நிதித் திட்டம்

இன்றே ரூ. 1000 Deposit செய்து அதற்கு நிகராக எங்கள் show room-லிருந்து சூரத் சாரிகள், பெங்கால் காட்டன், காஞ்சிபுரம் பட்டு, மைசூர் சில்க், கோரா காட்டன், சுங்குடி சேலைகள் மற்றும் சுடிதார் பிளவுஸ் ஆகிய அனைத்தையும் விற்பனைக்கு எடுத்துச் செல்லலாம். மேலும் நீங்கள் Deposit செய்த தொகையை 46 மாதங்களில் இரண்டு மடங்காக பெறலாம். அதுவரை எங்களிடமிருந்து புடைவைகளை விற்பனைக்கு எடுத்துச் செல்லலாம். மேலும் விவரங்களுக்கு,

**மீரா டெக்ஸ்டைல்ஸ்**

*26/1, மோதிலால் தெரு, தி.நகர்,*
*சென்னை - 600 017.*
*போன் : 4342696*

**Authorised Dealers :**
**WIMCO FABRICS - SURAT**

## அம்மன் தரிசனம்

*ஆன்மிக கலாசார மாத இதழ்*

- ஆறுவருடங்களாகத் தொடர்ந்து வெளியாகும் அம்மன் தரிசனத்தின் தீபாவளி மலர் 112பக்கங்களுடன் வெகு சிறப்பாகத் தயாராகிக் கொண்டிருக்கிறது.
- பல வண்ணப்படங்கள்.
- பிரபலமான எழுத்தாளர்களின் எழுத்தோவியங்களுடன் குங்குமப் பிரசாதமும் சேர்ந்து உங்களை தீபாவளியன்று பக்திப் பரவசமடையச் செய்யும் வகையில் வெளிவருகிறது.
- மிகப் பெரிய அளவில் மலர் தயாரானாலும் விலை ரூ.5.00 மட்டும் தான்.

**விவரங்களுக்கு**

சர்க்குலேஷன் மானேஜர்
அம்மன் தரிசனம் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்
*11, வெங்கடநாராயணா சாலை,*
*தி. நகர், சென்னை - 600 017.*
*போன்: 4348964.*

**செப்டம்பர் மாத இதழ் வாங்கிவிட்டீர்களா?**

ஓம் அகஸ்தீஸ்வராய நமஹ

**புராதன ஓலைச் சுவடிகளிலிருந்து உங்கள் பலாபலன்களை தெரிந்து கொள்ளுங்கள்**

பெருவிரல் ரேகையின் மூலம் புராதன ஓலை சுவடிகளிலிருந்து உங்களது ஜாதகத்தை கண்டுபிடித்து, உங்களது ஜனன காலம் முதல் ஆயுள் காலம் வரையுள்ள 12 பாவ பலாபலன்களையும் தெரிந்து கொள்ள

அணுக வேண்டிய முகவரி:

**நாடி ஜோதிடர் K.சுவாமி காளிதாஸ்**

**ஸ்ரீ அகஸ்திய மகாசிவ துல்லிய நாடி சோதிடாலயம்**

116-B, இளங்கோ நகர் (தெற்கு) விருகம்பாக்கம்,
சென்னை - 92. போன் : 4848838.

**அனைத்து மதங்களிலும் மணமகன், மணமகள் தேவைக்கு**

# HAPPY MARRIAGE CENTRE

HAPPY MARRIAGE CENTRE
116-B, ELANGO NAGAR (SOUTH) VIRUGAMBAKKAM, MADRAS - 600 092. PH : 4848838.

# KALKI SHOPPING PAGE

இந்தியாவின் தலை சிறந்த குழந்தை எழுத்தாளர் என்று தேர்ந்தெடுக்கப்பட்டு விருது பெற்ற

## டாக்டர் பூவண்ணனின் சிறுவர் இலக்கியக் களஞ்சியம்

ஒவ்வொரு தொகுதியும் 320 பக்கம் டெம்மி 1/8 அளவு அழகிய ஆப்செட் அச்சு உறுதியான அரைகாலிக்கோ பைண்டிங். பாடல், சிறுகதை, சித்திரக்கதை, பொது அறிவு, நாடகம், நாவல், படங்கள் அடங்கிய நூல்

| | |
|---|---|
| ஒரு தொகுதி விலை | : ரூ 150 |
| மூன்று தொகுதி விலை | : ரூ 450 |
| சலுகை விலை | : ரூ 350 |
| உங்கள் லாபம் | : ரூ 100 |

ரூ. 350 ஐ M.O/ டிராப்டு மூலம் இன்றே அனுப்புங்கள்.
ஒரு தொகுதி மட்டும் வேண்டுவோர் ரூ.125 அனுப்புக.
தபால் செலவு இலவசம்

உங்கள் குழந்தையின் அறிவு வளர்க்கும், ஆனந்தம் பெருக்கும் அற்புதத்தொகுதிகள்.

**பூவண்ணன் பதிப்பகம்**

1, பாரதி பூங்கா நான்காம் குறுக்குச் சாலை
சாயிபாபா காலனி, கோவை - 641 011

வியாபாரிகளும் தொடர்பு கொள்ளலாம்

---

## மணக்குது! மணக்குது!! சாம்பார், ரசம்

**Ruchi**

பெருங்காயம் தூள்




RUCHI AGRO PRODUCTS PVT. LTD.
50, Giriappa Road, Madras - 600 017
TEL: 8269290, 8269438, 8275048

---

## "ஒன்றரை வருடங்களாக ஆர்த்ரைட்டிஸ் வலி இன்றி . . ."



திரு. N. லட்சுமணன்
ஓய்வுபெற்ற உதவி பொது மேலாளர்
பாரத் ஸ்டேட் பாங்கு.

**"இன்று, TABE சிகிச்சைபெற்று 1½ வருடங்களாகியும் என்னுள் ஒரு சுறுசுறுப்பை உணர்கிறேன்."**

"ஆஸ்டியோ ஆர்த்ரைட்டிஸினால் 6 வருடங்கள் அவதிப்பட்டேன். வலி முதலில் இடது முழங்காலில் ஆரம்பித்து விரைவில் இரண்டு முழங்கால்களிலும் இடுப்பிலும் வலி அதிகமானது. நாற்காலியிலிருந்து எழுந்திருப்பது, காரிலிருந்து இறங்குவது போன்ற அன்றாட நடவடிக்கைகள் கூட மிகவும் சிரமமானது. பலர் முன்னிலையில் இது என்னை மிகவும் சங்கடத்திற்கு உள்ளாக்கியது.
பிறகு ஒருநாள் TABE விளம்பரத்தை செய்தித் தாள்களில் கண்டு அங்கு சென்றேன். TABE டாக்டர்களின் கவனிப்பும், எனக்களித்த உற்சாகமும் என் மனதில் நம்பிக்கையை ஏற்படுத்தியது. 40 நாட்களுக்குள் எனக்கு முழு நிவாரணம் கிடைத்தது. இன்று TABE சிகிச்சை முடிவடைந்து 1½ வருடங்கள் ஆகியும் கூட என்னுள் ஒரு சுறுசுறுப்பை உணர்கிறேன்."

*22, ஸ்டேட்பாங்க் ஆபீஸர்ஸ் காலனி, பெரம்பூர் ஹை-ரோடு, சென்னை - 12.*

★ காலத்தால் சோதிக்கப்பட்ட ஆயுர்வேத மூலிகை பவுல்டிஸ் (poultice) மூலம் நாங்கள் விரிவானதொரு வெளிப் பிரயோக சிகிச்சை திட்டத்தை ஆர்த்ரிட்டிஸ், ஸ்பாண்டிலிட்டிஸ், தோள்பட்டை வலி, இடுப்பு வலி, குதிகால் வலி போன்றவைகளுக்கு தகுதி வாய்ந்த ஆயுர்வேத மற்றும் அலோபதி டாக்டர்களின் மேற்பார்வையின் கீழ் வழங்குகிறோம்.

★ "இரு வேறு நபர்கள் ஒன்றுபோல் இருப்பதில்லை" என்பதை TABE கேர் கிளினிக்ஸ் (பி) லிமிடெட் நன்கு உணர்ந்துள்ளன. எனவே, காலம் மற்றும் விளைவுகளைப் பொறுத்தவரை சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம்.

**கலந்து ஆலோசிக்க, இப்போதே தொடர்பு கொள்க: தொலைபேசி: 8553772**

1, ஸ்ரீரங்கம் அவின்யூ, 53, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை - 8

காலை 9.00 மணி முதல்; இரவு 7.00 மணி வரை. வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.
அனைத்து முக்கிய கிரெடிட் கார்டுகளும் ஏற்றுக்கொள்ளப்படும்.




TABE/332

**TABE NOW OPENING IN PORT BLAIR TOO. PH: 30845/31175**



"இன்னிக்கி ஃபீல்டுல இருக்கற ப்ரொட்யூசருங்க அத்தனை பேருக்கும் தலைபோகிற பிரச்னை என்ன தெரியுமா?"

ஏவி.எம். ஸ்டுடியோவில் அரச மரத்தடி பிள்ளையாருக்கு நேர் பின்னால் உட்கார்ந்து, என் காசில் இரண்டு ஃபேண்டா குடித்துவிட்டு தண்டபாணி கேட்டான்.

"சொல்லு, தெரிஞ்சிக்கறேன்."

"கவுண்டமணியோட சம்பளம்."

"என்னது?"

"நம்ப முடியலை இல்லை? ஆனா இதான் உண்மை. இன்னைக்கு ஃபீல்டுல இருக்கற பெரும்பாலான ஹீரோக்கள்

# காமெடி மன்னனான காசல் மன்னன்!

எல்லோரை விடவும் அவர் சம்பளம் ஜாஸ்தி ஆயிடுச்சாம். மினிமம் பட்ஜெட் படம் ஒண்ணு எடுக்க ஆவுற காசை அவருக்குத் தரவேண்டி இருக்குதாம். கொஞ்சம் குறைச்சிக்கக் கூடாதான்னு கேட்டால்..."

"செந்திலைத் திட்றா மாதிரி திட்டறாரா?"

"சேச்சே! ஒரு மோகனப் புன்னகை வீசிட்டு அப்புறம் பாக்கலாம்னுடறாராம்."

"அது சரி. மார்க்கெட் இருக்கறப்ப சம்பாதிச்சாத்தானே உண்டு?"

"அதுக்காக? இன்னும் ரெண்டு வருஷத்துல ரஜினி சம்பளம் கேப்பாரோன்னு பயமா இருக்குதுன்னு நேத்திக்கு ஒரு புரொட்யூசர், ஒரு ஃபைனான்சியர்கிட்ட புலம்பிட்டிருந்தார், இதே மரத்தடியில."

"சரி. அதுக்கு என்ன சொன்னார் அந்த ஃபைனான்சியர்?"

"பேசாம எல்லா புரொட்யூசருங்களும் சேர்ந்து உங்க சங்கத்து மூலமா அவருக்கு ஒரு வேண்டுகோள் விடுங்க. கேக்காட்டி, நீங்களா ஒரு ரேட் ஃபிக்ஸ் பண்ணி அதை எல்லைக்கோடா வெச்சிருங்க. ஒத்து வந்தா சரி; இல்லாட்டி வேற ஆளைத் தயார் பண்ணப் பாருங்கன்னாரு."

"கவுண்டமணி ரேஞ்சுக்கு வேற காமெடியனா? விளையாடறியா?"

• பயமுறுத்துகிறார் கவுண்டமணி

"நான் என்னத்தை விளையாடறது? கேட்டதைச் சொல்றேன். இதைக் கேளு. சுந்தர் இப்ப 'மேட்டுக்குடி' பண்றாரில்லை?"

"ஆமா?"

"அதுல ஒரு சூப்பர் காமெடியனை அறிமுகப்படுத்தறார்."

"புதுமுகமா?"

"காமெடிக்குப் புதுமுகம்தான்."

"அப்படீன்னா?"

"காதல் மன்னன் ஜெமினி கணேசன்!"

"என்னது!"

"ஆமா! ஜெமினி கணேசனை இந்தப் படத்துல பிழியப் பிழிய காமெடி பண்ண வெச்சிருக்கார். அவரும் அசத்தியிருக்காராம். கதைப்படி அவருக்கு நக்மாவோட தாத்தா ரோல். தூறல் நின்னு போச்சுல நம்பியார் அசத்தின மாதிரி, இதுல ஜெமினி தான் கிளப்பியிருக்காராம். பர்ஃபாமென்ஸ் பார்த்துட்டு சுந்தரே அசந்துட்டார்னு கேள்வி. 'இப்போதைக்கு இந்த விஷயத்தை வெளியில விட வேணாம். படம் ரிலீஸாகி ஃபீல்டுல இருக்கற காமெடியன்ஸ் எல்லாரையும் ஜெமினி கேரக்டர் ஒரு மிரட்டு மிரட்டட்டும்னு திட்டம்!"



• 'கல்கி'யில் சுருதி

"அப்படிப் போடு."

"இதுல ஹைலைட் என்னன்னா, படத்துல கவுண்டமணியும் உண்டு."

"சபாஷ், சரியான போட்டி!"

"போட்டின்னதும் ஞாபகம் வருது. இந்த வருஷ தீபாவளி ரிலீஸ் படங்கள் சரித்திரம் படைக்கப் போவுது பாரு."

"எப்படி?"

"செமை போட்டி! சாதாரணமா, முன்னல்லாம் பெரிய ஆளுங்க படம் வுட சொல்ல, சின்னவங்க ஒதுங்கிக்குவாங்க. சமீப காலத்துல சின்னப்பசங்க படமெல்லாம் பிச்சிக்கிட்டுப் போனதால, தகிரியமா தீபாவளி ரேஸ்ல ஸ்டாருங்களோட மோதறாங்க. ஸ்டுடியோ பக்கம் போனா, தினம் தினம் நாலஞ்சு ஷூட்டிங் நடந்துட்டே இருக்கு. யாரைக் கேட்டாலும் தீபாவளி ரிலீஸுங்கறாங்க."

"நீ யாரைக் கேட்டே?"

"அகத்தியன். காதல் கோட்டை, காப்பிக் கோட்டையா இல்லையான்னு ஊர்ல நிறையப் பேர் பட்டிமன்றம் நடத்திட்டிருக்காங்க. இவர் அதைப் பத்தியெல்லாம் கவலைப்படாம சைலண்டா அடுத்த படத்துக்குக் கதை போட்டு, ஷூட்டிங்குக்கு ரயில் ஏறிட்டாரு. 'கோகுலத்தில் சீதை'ன்னு டைட்டில்."



''அந்த டாக்டர் 'போலி டாக்டர்னு' எப்படி கண்டுபிடிச்சீங்க...?''
''ஆபரேஷன் பண்ணறதுக்கு முன்னாடி ஒரு தடவை 'ஒத்திகை' பார்த்துருவோம்னு சொன்னாரு அதவச்சித் தான்...!''
– இ. ராதாகிருஷ்ணன்

''அப்புறம்?''

''நாட்டுப்புறப்பாட்டு ஹிட் ஆன ஜோர்ல கஸ்தூரி ராஜா, 'எட்டுப்பட்டி ராசா'ன்னு ஒரிஜினல் கிராமத்து டைட்டில் வெச்சி, நெப்போலியன், குஷ்பு, ஊர்வசியைக் கூப் பிட்டு தேனிப்பக்கம் போயிருக்காரு. 'அலெக் சாண்டர்', 'உல்லாசம்', 'உன்னை விட மாட் டேன்' என்று ஏகப்பட்ட தீபாவளி ரிலீஸ்...''

''நிறுத்துப்பா. இப்பவே தீபாவளி வந்துட்டாப்பல இருக்குது.''

''முழுக்க சொல்ல விடு. பாலசந்தரோட 'கல்கி', மணிரத்னத்தோட 'ஆனந்தம்', பாக் யராஜோட 'ஞானப்பழம்'....''

''மூச்சு வாங்குது தண்டபாணி.''

''விஷயத்துக்கு வரேன். இத்தினி பேரும் கேரண்டியா தீபாவளிக்கு எங்க படம் நிச்சயம் ரிலீஸ்னு சொல்லியிருக்காங்களா? அதனால வேற சிலர் இப்ப ரொம்ப பாதிக்கப்பட்டிருக் காங்க.''

''யாரு?''

''ஒரு வருஷமா, அதுக்கு மேலயுமா புரொடக்ஷன்ல படத்தை வெச்சிட்டு, இப்ப கிட்டத்தட்ட முடிச்சிட்டு, செப்டெம்பர், அக்டோபர்ல ரிலீஸ் பண்றதுக்கு யோசிக்கிற புரொட்யூசருங்களுக்கு செமை தலைவலி. இப்ப ரிலீஸ் பண்ணா, என்னதான் பெஸ்ட் பிலிமா இருந்தாலும் நவம்பர்ல தியேட்டரை விட்டு எடுக்க வேண்டியதா இருக்கும். சரி, சேர்த்து தீபாவளிக்கு விட்டுடலாம்னா எடு படாம போயிடுமோன்னு பயம் ஒரு பக்கம். அதுவரைக்கும் வாங்கின கடனுக்கு வட்டி யார் கட்டறதுன்ற கவலை ஒரு பக்கம். மீரான் சாகிப் தெருப் பக்கம் போயிப்பாரு. பணத்தை அட்வான்ஸா குடுத்த டிஸ்ட்ரிப்யூட்டருங்க ளெல்லாம் சிண்டைப் பிச்சிட்டு இருக்காங்க.''

''அடடா, ரொம்பப் பாவம் தண்டபாணி.''

''ரொம்ப சென்ட்டிமென்ட் ஆயிடாதே. ஒரு ரகசியம் சொல்றேன் கேளு. இது வேற விஷயம்.''

''சொல்லு. யாரைப் பத்தி?''

''அஜித்குமார்.''

''ஹீரா விஷயமா? மனுஷன் அதுலயும் சமீபகாலமா ஜகா வாங்கறார் போல இருக்கு?''

''அதெல்லாம் நமக்குத் தெரியாது. இதைக் கேள். சினிமாவுல நன்றிக்கடன் தீர்க்கற யாரைப் பத்தியாவது, எப்பயாவது கேள்விப் பட்டிருக்கியா?''

''சேச்சே. சாத்தியமே இல்லை.''

''இப்ப நடந்திருக்கு. 'ஆசை' படம்தான் தனக்கு மறுவாழ்வு குடுத்ததுன்ற நன்றியை வஸந்தோட அடுத்த படத்துக்குக் கேட்டவு டனே கால்ஷீட் குடுத்திருக்கார் அஜித்.''

''இதென்ன பெரிய விஷயம்?''

''முழுக்கக் கேளு. அடுத்த படம் 'நேருக்கு நேர்'. மணிரத்னம் தயாரிப்பு. அதனால அவங்க கம்பெனி கொள்கைப்படி அடிமாட்டு ரேட் பேசியிருக்காங்க.''

''எவ்வளவு?''

''ஒரு ரூபாய்க்கும் குறைச்சலா.''

''ஜெயலலிதா வாங்கின சம்பளத்தை விட கம்மியாவா?''

''மூண்டம்! சினிமா பாஷைல ஒரு ரூபான்னா பக்கத்துல அஞ்சு சைபர் போட் டுக்கணும். விஷயத்தைக் கேளு. இப்ப அஜித் தோட சம்பளம் கிட்டத்தட்ட நாப்பது ரூபா. நாப்பது எங்க, ஒண்ணு எங்க! ஆனா வஸந் துக்காக ஒத்துட்டு நடிச்சிட்டிருக்கார்.''

''சே, புல்லரிக்குது தண்டபாணி! உனக்கு யார் சொன்னாங்க இந்தத் தகவலை?''

''சம்பந்தப்பட்ட டைரக்டருக்கு ரொம்ப வேண்டப்பட்ட ஒரு எழு எழுத்து எழுத் தாளர்!''

''பரவாயில்லையே. எழுத்தாளர்களோட வெல்லாம் தொடர்பு வெச்சிருக்கே?''

''என் தொடர்பு எல்லையில்லாதது. அதை விடு. இன்னொரு எழுத்தாளர் நியூஸ் சொல் றேன், கேட்டுக்கோ. பூமணி தெரியுமில்லை?''

''இந்த... சிறு பத்திரிகைகள்லல்லாம் எழுது வாரே?''

''பரவால்லை. கொஞ்சம் உலக அறிவு உனக்கும் இருக்கு. அவர் ஒரு படம் டைரக்ட் பண்றார். முப்பத்தஞ்சு லட்சம் பட்ஜெட். நாசர், ராதிகா, இளையராஜான்னு பெரிய ஆளுங்களை வெச்சி. 'கருவேலப்பூக்கள்'னு டைட்டில். இன்னைக்குக் காலைலதான் இங்க பூஜை நடந்துச்சி.''

''பரவாயில்லையே? யாராம் புரொட்யூசர்?''

''என்.எஃப்.டி.ஸி! லெனின் சொன்னதா கொஞ்ச நாள் முன்ன சொன்னேனில்லை? ஸ்கிரிப்ட மட்டும் சூப்பரா இருந்தா காசு குடுக்க அவங்க தயங்கறதே இல்லையாம் இப்ப. சேதுமாதவனோட 'ஸ்த்ரீ'க்கு அப்புறம் என்.எஃப்.டி.ஸி. தயாரிக்கிற படம் இதுதான்!''

''பரவாயில்லை. ஆனா, ஒரு நல்ல ஸ்கிரிப்டுக்கும் அடுத்த நல்ல ஸ்கிரிப்டுக்கும் எத்தனை மாச இடைவெளி!''

''ம்? சுமார் நூறு பட இடைவெளி!''

– கிச்சா




# SABARI INVESTMENTS AND PROPERTIES

18/17, First Floor, Third Cross St., opp. R.A. Puram, Corporation Office Complex, (opp. Kaliappa Hospital), Madras - 600 028. Tele/Fax : 458931

## DEPOSITS ARE ACCEPTED

### SCHEME - I

## CUMULATIVE DEPOSITS

| Term (Months) | Minimum amount | Maturity Value for Rs. 5000 | Annual yield % * |
|---|---|---|---|
| 37 | Rs. 5000 | Rs. 10000 | 32.43 |
| 54 | Rs. 5000 | Rs. 15000 | 44.44 |
| | and in multiples of Rs. 1000/- | | |

* Interest compounded monthly @ 24% p.a.

### SCHEME - II

## FIXED DEPOSITS

| Term (Months) | Minimum Amount | Interest p.a. | Incentive on Deposit |
|---|---|---|---|
| 12 | Rs. 10000 | 22% | 1.5% |
| 24 | Rs. 10000 | 23% | 2% |
| 36 | Rs. 10000 | 24% | 2.5% |

## + ATTRACTIVE GIFTS

- Your Deposits are invested in Building Promotion activities, Vehicle hire purchase loan, etc.
- Company is managed by young well experienced dynamic persons with the guidence of professionals.
- Group Company of Sabari foundations Pvt. Ltd., which is already in Building Promotion activities with an annual turnover of more than Rs. 2.50 Crores.
- Post dated cheques will be issued in advance for the Interest & Deposit Amount.

# கடலோரக் கொலைகள்


கதை : பெனிட்டோ குமார்

படம் : சசி


6

வேறொரு ஆளை வேலைக்கு அழைத்து வந்தான் நந்து...

ஆஷா! இவன் ராஜதுரை. நல்லா சமைப்பான். எந்த வேலை கொடுத்தாலும் செய்வான்.

உங்களுக்கு எப்படி நன்றி சொல்றது?

நாங்க கிளம்பறதுக்கு முன் உங்களுக்கு ஏதாவது பரிசு தரணும். என்ன வேணுமோ கேளுங்க!

ஹி... ஹி... அப்புறமா கேட்கிறேன். வரட்டுமா?

ஹும்... 'உன்னையே தா'ன்னு கேட்க எனக்குத் தைரியம் வரலையே...

இரவு. இன்ஸ்பெக்டர் கோபியை சந்திக்க வந்தார் சப்-இன்ஸ்பெக்டர் மதிவாணன்

என்ன மதி! ஆள் கிடைச்சானா?

ஓ! கசாப்புக் கடைல மட்டன் வெட்டிட்டிருந்தான். இப்ப வருவான்.

அந்த வடநாட்டு ஆசாமிகளையும் விசாரிச்சா நல்லதுன்னு நினைக்கிறேன்.

துன்புறுத்தற மாதிரி இல்லாம, நாசூக்கா நடந்துக்குங்க. அந்தாளு பெரிய எழுத்தாளராம்...!

கஜேந்திரன் உள்ளே வந்து...

ஐயா! எனக்கு எதுவும் தெரியாதுங்க! நான் ஒண்ணும் பண்ணலீங்க!

டேய்! உன் அப்பா சொத்து முழுசும் உன் அண்ணன் பரமகுருவுக்கே எழுதி வைச்சார்தானே!

அது நெசந்தாங்க. அதுக் காசுக் கோவிச்சுட்டுப் போனவன். இப்பத்தாங்க மறுபடியும் இந்த கிராமத்துக்குள்ளே வரேன்.

தொண்டி குப்பத்துல தான வசிக்கிறே? ஊரை விட்டு ஓடப் பார்க்காதே! உன் பேர்ல சந்தேகம் வலுப்படும்!

விசாரணை நடத்த பண்ணை வீட்டுக்கு வந்தார் மதிவாணன்.

இந்தாளு பிரதீப்கிட்ட இங்கிலீஷ்ல வேற பேசி சமாளிக்கணும்; பேஜாரு!

வித்தியாசமா ஏதாவது சத்தம் கேட்டுதா?

ராத்திரி எத்தனை மணிக்குப் படுத்தீங்க?

பதினோரு மணிக்கு

நானும் ஆஷாவும் பேட்டி எடுத்ததையெல்லாம் விவரமா எழுதி, பதிவு செய்தோம். தூங்கறப்ப மணி ரெண்டு இருக்கும்.

ஆமா!

சொல்லிவிட்டு நாக்கைக் கடித்துக் கொண்டான் பிரதீப்.

(தொடரும்)



## வி.ஐ.பி.க்கு வந்த கடிதங்கள்:

# "கண்ணீரை வரவழைத்த கடிதம்...!"

– வழக்கறிஞர் காந்தி

இருநூறாவது ஆண்டுவிழாக் கொண்டாட்டம் தொடர்பான கருத்தரங்கில் கலந்து கொள்ள அமெரிக்கா சென்றிருந்த நான், அப்படியே லண்டனுக்கும் சென்றேன். அப்போது உமாவின் வீட்டுக்கும் சென்றிருந்தேன்.

பிறகு சென்னை வந்த கொஞ்ச காலத்தில் உமா எழுதிய 25 நவம்பர் 1991 தேதியிட்ட கடிதம் ஒன்று கிடைத்தது. சீரான எழுத்துக்களோடு அமைந்திருந்தது அந்தக் கடிதம். கூடவே இன்னொரு கடிதம், எனக்குக் கடிதம் எழுதிய அன்றே மாரடைப்பு ஏற்பட்டு அவள் இறந்துவிட்டதாக. இதைப் படித்ததும் அதிர்ந்து விட்டேன். கண்களிலிருந்து கரகரவென்று தானாகக் கொட்டியது- உமா தன் உயிர் பிரிவதற்கு முன் எழுதிய கடைசிக் கடிதம் எனக்குத்தான் என்பதையும், தான் இறப்பிற்கு வெகு சமீபத்தில் இருப்பதை அவள் கொஞ்சம் கூட அறியாமல் கடைசி நாள் வரையில் இருந்ததையும் எண்ணி.

பூனா நகரில் தங்கி சட்டம் படித்துக் கொண்டிருந்த சமயம். சுமார் 21 வயதிருக்கும். அப்போது அருகிலுள்ள ஒரு தமிழ்க் குடும்பத்துடன் நட்பு ஏற்பட்டது. மிகவும் அன்போடு பழகினார்கள், அந்தக் குடும்பத்தினர். தங்கள் வீட்டில் எந்த சிறப்பு உணவு என்றாலும் அன்று என்னைக் கட்டாயம் அங்கு சாப்பிடச் செய்து விடுவார் அந்தக் குடும்பத் தலைவி. அது ஒரு பிராமணக் குடும்பம் என்றாலும் என்னிடம் அவர்கள் எந்த வித்தியாசமும் பாராட்டவில்லை. அவர்கள் குடும்பத்து மகள்தான் உமா. அப்போது சின்னப் பெண். பள்ளிக்கூடத்துக்குச் செல்லத் தொடங்கியிருந்தாள். 'மெட்ராஸைப் பற்றி ஏதாவது நியூஸ் சொல்லுங்க காந்தி மாமா, ஏதாவது கதை சொல்லுங்க காந்தி மாமா' என்றெல்லாம் என்னிடம் எதையாவது கேட்டுக் கொண்டிருப்பாள்....

காலப்போக்கில் உமா கல்யாணமாகி லண்டனில் செட்டிலாகி விட்டாள். அமெரிக்க அரசியலமைப்புச் சட்டத்தின்

25.11.91
லண்டன்.

அன்புள்ள காந்தி மாமா,

உங்கள் எல்லோருக்கும் என் புத்தாண்டு வாழ்த்துக்கள். கூடவே ஒரு சின்ன வேண்டுகோள்.

என் மகள் சோன்யா தென்னிந்தியாவுக்கு வந்து, அங்குள்ள அனாதை இல்லங்கள் மற்றும் கிறித்துவ சேவை மருத்துவமனைகள் எப்படி இயங்குகின்றன என்பதைக் கண்டறிய இருக்கிறாள். இது அவளது கல்வி தொடர்பான டூர். அங்கு அவ்வை இல்லத்தில் ஓரிரு வாரங்கள் தங்குவதாக இருக்கிறாள். முதலில் மதர் தெரசாவிடம் இரண்டு மாதங்கள் வாலன்டியராக இருக்கவும் எண்ணுகிறாள். உங்களுக்கு உள்ள செல்வாக்கைப் பயன்படுத்தி வேலூர் மருத்துவமனைக்கும் சிட்டத்தூர் கிராமத்துக்கும் விஜயம் செய்ய அவளுக்கு அனுமதி வாங்கித் தர முடியுமா?

ஏற்கெனவே அவள் இங்குள்ள எல்லா மருத்துவக் கல்விக்கூடங்களுக்கும் விண்ணப்பித்து, அத்தனையிலும் அவளுக்கு சீட் கிடைத்திருக்கிறது. எதைத் தேர்வு செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறாள்.

இந்த நாட்டில் கிட்டத்தட்ட எல்லோருமே பல்கலைக்கழகத்தில் சேருவதற்கு முன் ஒரு வருடம் விடுமுறை எடுத்துக் கொள்வது வழக்கம். அந்த விதத்தில் சோன்யா இந்தியா-தாய்லாந்து-சிங்கப்பூர்- பாலி-நியூசிலாந்து-ஆஸ்திரேலியா-லாஸ் ஏஞ்ஜெல்ஸ்-நியூயார்க் என்று டூர் அடித்து விட்டு லண்டன் திரும்ப இருக்கிறாள். சென்னைக்கு வரும்போது அவள் உங்களைச் சந்திப்பாள்.

மற்றபடி இங்கு எல்லோரும் நலம். உங்களிடமிருந்து பதிலை எதிர்பார்க்கிறேன்.

உங்கள் அன்புள்ள,
உமா

●●●●●●●●●●●●

உடல் நலம்கெட்ட அன்று காலை இந்தக் கடிதத்தை உமா உங்களுக்கு எழுதியிருக்கிறாள். அவள் 26 நவம்பர் 1991 அன்று இரவு இறந்து விட்டாள் என்பதை வருத்தத்துடன் தெரிவிக்கிறோம்.

தன் எண்ணங்களையும், உணர்வுகளையும் இந்தக் கடிதத்தில் எழுதி உங்களுக்கு அனுப்புவதற்காகத் தயாராக வைத்திருந்தாள் அவள். இந்தக் கடிதம் உங்களை அடைய வேண்டுமென்ற அவளது எண்ணம் நிறைவேற வேண்டும் என்பதுதான் எங்கள் உள்ளப்பூர்வமான ஆசை.

அன்புடன்,
பாபு, சோன்யா, கன்யா

தொகுப்பு: அருணா சரண்யா

## வாரம் ஒரு போட்டி - 3 முடிவு!

இரண்டு படங்களுக்கு இடையிலான 12 வித்தியாசங்கள்:

1. காவல் நிலைய எண்;
2. ஜீப்பின் ஹெட் லைட்;
3: போலீஸ்காரரின் தொப்பி;
4. தலைவரின் துண்டு;
5: கீழே கிடப்பவரின் பேண்ட்;
6. உதைப்பவரின் செருப்பு;
7. வேன் ஜன்னல்;
8. போலீஸ்காரரின் பாக்கெட்;
9. கறுப்புச் சட்டைக்காரரின் மூக்கு;
10. மரக்கிளை;
11. கேமரா வாரின் நீளம்;
12. போலீஸ் ஸ்டேஷனின் ஜன்னல்.

இந்தப் பன்னிரண்டு வித்தியாசங்களையும் ஏறத்தாழ 96 சதவிகித வாசகர்கள் சரியாக எழுதியிருந்ததால் வேறு வழியின்றிக் குலுக்கல் முறையில்தான் தேர்ந்தெடுக்க வேண்டியதானது. அதில் தேர்ந்தெடுக்கப்பட்டு 5000 ரூபாய் பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:
மு. பாலகிருஷ்ணன்,
4/1, ராஜாகோரி லேன்,
ஆற்காடு.(வ.ஆ.அ.மா.)

## மனசுல இருந்தது கொட்டிட்டேன்! – மனோரமா



# “இப்படிப்பட்ட ஆட்களுக்கா பிரசாரம் செய்தோம்?”

“குறிப்பிட்ட சில பத்திரிகைகள் என்னைக் குறிவைத்துத் தாக்குவதிலும் கிண்டல் செய்வதிலும் கடந்த சில மாதங்களாக ஈடுபட்டு வருகின்றன. என் மனதைப் பாதிக்கும் இந்த விஷயத்தை கல்கி போன்ற கண்ணியமான பத்திரிகையொன்றிடம் சொல்லி, ஆதங்கத்தைக் கொட்ட வேண்டும் என்றுதான் காத்திருந்தேன்!” என்று ஆரம்பித்தார் ஆச்சி மனோரமா.

“அ.தி.மு.க.வுக்கு பிரசாரம் செய்ததற்காக நான் நிறைய கோடிகள் வாங்கியதாகவும் என் மகன் மீதுள்ள சில குற்றங்களை அரசின் துணையோடு மறைத்து விட்டதாகவும் சில பத்திரிகைகளில் எழுதியிருந்தார்கள். என் மகன் எந்த கிரிமினல் வழக்கிலும் இணைத்துப் பேசப்பட்டவன் அல்ல. ஜெயலலிதா ஆண்ட ஐந்து வருட காலத்தில் எந்த சிபாரிசுக்காகவும் நான் அவரைச் சந்தித்ததில்லை. பொது மேடைகளில் பார்ப்பதோடு சரி.

“நான் என்ன பெரிய குற்றம் செய்து விட்டேன்? பெண் முதலமைச்சர் என்று மட்டுமல்ல; பல வருட காலமாக நட்பு பாராட்டி வருபவர் என்ற முறையில் ஜெயலலிதா அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அ.தி.மு.க.வுக்கு பிரசாரம் செய்தேன். மேடையில் பேசும்போது உணர்ச்சி வேகத்தில் ரஜினி பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் அதிகமாகப் பேசியிருக்கலாம். இத்தனைக்கும் இந்தியன் எக்ஸ்பிரஸில் வந்த விஷயம்தான் அது. பின்னர் இது குறித்து ரஜினியிடம் விளக்கிய போது, அவர் மிகவும் பெருந்தன்மையாக ‘நான் ஒண்ணும் தப்பாகவே எடுத்துக்கல; கலைஞர்கள் உணர்ச்சிவசப்படுவார்கள் என்பது எனக்குத் தெரியாதா! அதனால்தான் நானே மேடையில் பேச பலமுறை யோசிக்கிறேன்!’ என்றார்.

“ஆனால் பத்திரிகைகளோ, இதன் காரணமாகப் படத்தயாரிப்பாளர்கள் என்னைக் கண்டு ஓடுவதாகவும் சினிமா உலகில் நான் அனாதையாகி விட்டது போலவும் எழுதி மகிழ்கின்றன. இன்றும் நான் ஆறேழு படங்களில் நடித்து வருகிறேன். இதைவிட எப்படி பிஸியாக இருக்க முடியும்? விஜயகாந்த், தமது படத்தில் இருந்து என்னை நீக்கி விட்டார் என்று எழுதியிருந்தார்கள். உண்மை என்னவென்றால் விஜயகாந்த் படமே எடுக்கவில்லை என்பதுதான். இப்படி ஏதேதோ உண்மையற்ற விஷயங்களை எழுதுகிறார்கள். அவர்களுக்கு மனசாட்சி – மனிதாபிமானம் கிடையாதா?

“மிகவும் கஷ்டப்பட்டு வாழ்க்கையில் முன்னேறியவள் நான். கடந்த 38 வருடங்களாக ஃபீல்டில் இருக்கிறேன். நடிப்பதைத் தவிர வேறு சிந்தனை எதுவும் எனக்கு இருந்தது கிடையாது. தொழிலுண்டு; நானுண்டு என்று இருந்து விடுவேன். இப்படிப்பட்ட எனக்கு நேரம் சரியில்லை... கடந்த ஆண்டு என் மகன் பூபதிக்கு ஹார்ட் அட்டாக் வந்ததிலிருந்து மனதைத் துயரப்படுத்தும் நிகழ்ச்சிகள் நடந்தவாறே இருந்தன. தேர்தல் பிரசாரத்தின்போதே நானும் என் மகனும் விபத்தில் சிக்கினோம். அ.தி.மு.க. ஆட்சி பற்றியும் மந்திரிகளின் சுருட்டல்கள் பற்றியும் செய்திகள் வருவதைப் பார்க்கும்போது, ‘இப்படிப்பட்ட ஆட்களுக்குப் பிரசாரம் செய்து விட்டோமே!’ என்ற வேதனைதான் என் மனத்தை வாட்டுகிறது.

“கலைஞரும் எனக்கு நன்கு தெரிந்தவர்தான். தொடக்க காலத்தில் அவர் வசனமெழுதிய ‘மணிமகுடம்’ போன்ற தி.மு.க. பிரசார நாடகங்களில் பலமுறை நடித்திருக்கிறேன். இப்போது நான்காவது முறையாக முதல்வராக வந்திருக்கும் அவரைச் சந்தித்து வாழ்த்த விரும்பினாலும், மனதில் ஒரு குற்ற மனப்பான்மை குறுகுறுக்கிறதே!” என்றார் மனோரமா.

சந்திப்பு : ப்ரியன்
வண்ணப்படம் : யோகா

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.


சம்பந்தம் கூடி வரும்
வேளையிலே
சாரதா'ஸ் அழைக்குதம்மா
சேலையிலே!
தொட்டுப்பார்த்த உடை
கட்டிப்பார்க்கையிலே
என்ன இன்பசுகமோ!


சாரதா'ஸ்
முகூர்த்த பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்
827, அண்ணா சாலை, தன்பில்டிங், சென்னை - 2
போன் : 852 11 77
32, என்.எஸ்.பி.ரோடு, திருச்சி - 2
போன் : 27077
சாரதாஸ் திருச்சி - 2, சென்னை - 2
தவிர வேறு எங்கும் கிளைகள் கிடையாது